# கல்கி

கலை விழா சிறப்பிதழ்

KALKI
17.12.89 ரூ. 2.50



சந்தானத்துக்குப் பட்டம்;
செம்மங்குடிக்குப் பெருமிதம்!

# இப்போது விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.




இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பையிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| பேக் | 100 கிராம் விலை |
|---|---|
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |

உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கனமாய் கிடைக்கிறது இதில் உங்களுக்கு ஒரு துளி அளவு விம் உபயோகமோங்கும் நுரை கொழித்து பிசுக்குகளை விலக்க ஈஸி வெளிப்போகிறது களங்களாக... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமிகுக.

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்





திருமண வரவேற்பின் போது இளையராஜா மெல்லிசை விருந்து.



# முதல்வர் வீட்டுத் திருமணம்

●● தேசத் தலைநகரில் வி. பி. சிங்குக்கும் பிரதமர் பதவிக்கும் ஒரு கல்யாணத்தை முன்னின்று நடத்தி வைத்த கையோடு கருணாநிதி, மாநிலத் தலைநகரில் மகளின் திருமணத்தை விமரிசையாகக் கொண்டாடினார்.

●● கல்யாணத்துக்குத் துணைப் பிரதமர் தேவிலாலின் விஜயம், அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் விளங்கியது. தமிழகத்துக்குத் 90,000 டன் அரிசி வழங்கியது, தேர்தல் சமயத்தில் காங்கிரஸ் ஆட்சி செய்த ஒரு கேவலமான சூழ்ச்சியை அடிக்கோடிட்டுக் காட்டியது.

●● கனிமொழி — அதிபன் போஸ் திருமணத்துக்குப் போடப்பட்ட ஸ்பெஷல் பந்தல் போதாமல் கூட்டம் நிரம்பி வழிந்தது. காலை — மாலை இரண்டு வேளையும் முக்கிய பிரமுகர்கள் மட்டுமின்றி கட்சித் தொண்டர்களும் ஏராளமாக வந்திருந்தனர். இரு தேர்தல்களில் உழைத்த தொண்டர்களுக்குப் பாராட்டுத் தெரிவித்து உபசரிப்பது போன்றும் திருமண நிகழ்ச்சி விளங்கியது.

●● சீர்திருத்தக் கல்யாணம். உடனடியாகத் திருமணம் மண்டபத்திலேயே பதிவு செய்யப்பட்டது.

●● கலைஞர் திருமண மண்டபத்தின் சமையல் கூடம், அறிவாலயத்துக்குப் பக்கத்துக் காம்பவுண்டில் உள்ள அபட்ஸ்பரியின் சமையல் கூடமும் கார் பார்க்கும் பயன்படுத்தப்பட்டன. இரண்டுக்கும் இடையில் உள்ள காம்பவுண்டு சுவரை நாலு இடங்களில் இடித்து வழி ஏற்படுத்தினார்கள்.

●● சமையல் பணியை ஏற்றுக் கொண்டு பலரும் பாராட்டும்படி நிர்வகித்தவர் தஞ்சை பாலன் ஐயர். பத்தாயிரம் மடங்கில் இரு வேளையும் விருந்துண்டவர்களைச் சமாளித்தது பெரிய காரியம்தான்.

●● திருமணத்துக்கு மூன்று விதமான மெனுக்களைப் பரிசீலனை செய்து கடைசியில் ஒன்றை ஓ. கே. செய்தார் ராஜாத்தி அம்மாள்.

●● திருமண நாளன்று காலை டிபன்: அல்வா, இட்டிலி, பொங்கல், வடை, கொத்சு, காப்பி.

●● முகூர்த்த சாப்பாட்டு: முந்திரி கேக், பால் பாயசம், வெள்ளரி பச்சடி, தக்காளி ஸ்வீட் பச்சடி, பீன்ஸ் பொறியல், உ. கிழங்கு ரோஸ்ட், பப்படம், பிரிஞ்சி — குருமா, நேந்திரம் வறுவல், வெங்காய சாம்பார், பைன் ஆப்பிள் ரசம், வடை, தயிர், எலுமிச்சை, மாங்காய் ஊறுகாய்.

●● ரிசப்ஷன் டின்னர் மெனு: குலோப் ஜாமுன், உ. கிழங்கு சிப்ஸ், தயிர் பச்சடி, உ. கிழங்கு போண்டா, பழ ஸ்வீட் பச்சடி, அப்பளம், காலி ஃப்ளவர் ரோஸ்ட், அவியல், பிசி பேளா பாத், தேங்காய் சாதம், கருவேப்பிலை சாதம், சேமியா பகளாபாத், பாதாம் கீர், ஐஸ்கிரீம், பீடா.

●● முகூர்த்த சாப்பாட்டுக் கடை முடிய பிற்பகல் மூன்று ஆகி விட்டது. இரவு டின்னர் முடியும் போது மணி பன்னிரண்டு!

●● சுமார் 550 பேர் பம்பரமாய்ச் சுழன்று, பல்வேறு வேலைகளையும் செய்தார்கள்.

— ஜூலி

படங்கள்: சுபா

"டெ விஜயலக்ஷ்மி சுப்ரமண்யம்:
ல்லியில் சங்கீத பூஷணம் கே. கிருஷ்ணசாமியிடமும் டி. ஆர். எஸ் ஸிடமும் பாட்டு கற்றுக் கொண்டிருந் தேன்... இசையில் எனக்கு அருமையான அஸ்திவாரம் அமைத்துக் கொடுத்திருந் தனர். சென்னை வந்ததும் யாரிடம் தொடர்ந்து பாட்டு கற்றுக் கொள்வது என்பது கேள்விக்குறியாகியது. திரும்பின பக்கமெல்லாம் வித்வான்கள், இசை வகுப் புகள்... டெல்லியில் ஒரு முறை எஸ். ராஜம் அவர்களின் கச்சேரியைக் கேட்டதும் என் சித்தப்பா அவருடைய வித்வத்தைப் பற்றி மிகவும் உயர்வாகச் சொல்லியிருந்ததும் நினைவுக்குவர, அவரை அணுகினேன். ராஜம் ஸார் ஒரு நிமிஷம் கூடத் தயங்கா மல், யோசிக்காமல், என்னை மாணவியாக ஏற்றுக் கொண்டார். பந்தா இல்லாத



# ஏன் குருவைத் தேர்ந்தெடுத்தது ஏன்...?

* ராம்

அவரது எளிமையாலும், இசைத் திறமை யாலும், வித்தியாசமான பாணியாலும் ஈர்க்கப்பட்டு, அவரது மாணவியான எனக்குப் பல இனிய ஆச்சரியங்கள் காத் திருந்தன:

- கீர்த்தனைகள் பாடும்போது நமது கற் பனையில் உதிக்கும் சங்கதிகளைக் கலக் காமல் அவற்றை இயற்றியவர்கள் தந்த வடி வத்திலேயே பாட வேண்டும் என்ற அவரது கருத்து என் மனத்தில் இருந்த கருத்துடன் நூறு சதவிகிதம் ஒத்துப் போயிற்று.

- ராகம், நிரவல், சுவரம் போன்றவை

* விஜயலக்ஷ்மி சுப்ரமண்யம்



பாடும்போது தாம் எதிர்பார்க்கிறபடிதான் பாட வேண்டும் என்று அவர் எண்ணியதே யில்லை. கற்பனையை ஊக்குவித்தார்.

● 'என்ன பாட்டு கற்றுக் கொள்கிறாய்?' என்று கேட்டு நான் விரும்பியதைச் சொல்லிக் கொடுத்தார்.

● உள்ளூரில் எங்கு நான் கச்சேரி செய்தாலும் வந்து கேட்டு, விமர்சித்து, ஊக்குவிக்கிறார். ஒரு கச்சேரிக்கு வர முடியாமல் போனபோது, அதன் 'டேப்'பை என்னிடம் வாங்கி, போட்டுக் கேட்டு, ஒவ்வொரு பாட்டுக்கும் தமது விமர்சனத்தைத் தனித் தனியாய் எழுதிக் கொடுத்தார்.

ஒரு சிஷ்யைக்கு இதைவிட வேறு என்ன வேண்டும் சொல்லுங்கள் ...!

## ஜே. வைத்தியநாதன்:

"எந்த குரு தம் சிஷ்யனுக்குத் தம்முடைய வாத்தியத்தையே எடுத்துக் கொடுத்துக் கச்சேரிக்கு வாசிக்க அனுப்பி வைப்பார் சொல்லுங்கள்...?! என் குரு கொடுத்திருக்கிறார்! ஒரு தடவை வெளியூர் கச்சேரிக்குப் போகும்போது மூர்த்தி சாரிடம் போய் நின்றேன். மிருதங்கம் வேண்டும் என்று தயங்கியபடி சொன்னேன். உடனே தம் வாத்தியத்தை எடுத்துக் கொடுத்து, ஆசீர்வாதமும் பண்ணி அனுப்பினார்.

இத்தகைய உயர்ந்த குருவிடம் நான் வந்து சேர்ந்த கதை சுவாரஸ்யமானது... ஏழெட்டு வயதாய் இருந்தபோது அப்பா (வித்வான் டி. கே. ஜெயராமன்) பாட, நான்

* ஜே. வைத்தியநாதன்



* மாத்யூ ஆலென்





* கவித்ரா, சைத்ரா, சங்கீதா.



"பாடச் சொல்லி ஏகப்பட்ட சீட்டுகள் வந்தது. நீ பார்க்கலியே!"

"அதான் பார்த்துண்டு இருக்கேனே....!"

ஒரு மரபெஞ்சில் தாளம் தட்டுவேன். அதைக் கேட்டதும் அவர் என் ஆர்வத்தை உணர்ந்து பாலக்காடு மணி அய்யரிடம் அழைத்துப் போனார். மிருதங்க வகுப்புகள் தொடங்கின. ஆனால் மணி அய்யரின் உடல்நலக் குறைவால் அவை தொடரவில்லை. இத்தருணத்தில்தான் அப்பா கச்சேரிகள் சிலவற்றுக்கு மூர்த்தி சார் மிருதங்கம் வாசிக்க, பின்னால் தம்புரா போட்டுக் கொண்டிருந்த நான் மெய்மறந்தேன். அவரிடமே அப்பா என்னை அழைத்துப் போனார். ஒருகணம்கூட யோசிக்காமல் என்னைச் சிஷ்யனாக்கிக் கொண்டார் மூர்த்தி சார்.

மணிக் கணக்கும், money கணக்கும் பார்க்காமல் எனக்கு வகுப்புகள் நடத்திக் கொண்டிருக்கிறார். வெறும் வாத்திய வாசிப்பை மட்டும் அவர் எனக்குச் சொல்லித்தரவில்லை. ஒரு கச்சேரியை எப்படி போஷிக்கச் செய்வது, எந்தப் பாட்டுக்கு எப்படி வாசிப்பது, என்று நடைமுறைப் பாடங்கள் கற்பிக்கிறார். 'மிருதங்கம் இசையின் மிருதுவான அங்கமாய் இருக்கணும்' என்ற அவரது அறிவுரை எனக்குக் கைமேல் பலன் தந்திருக்கிறது. அகில இந்திய வானொலியில் நேரடியாக பி—ஹைஐ கிரேட் அங்கீகாரமும், மத்திய அரசின் உதவித் தொகையும் எனக்குக் கிடைத்துள்ளன. அதைவிடச் சந்தோஷமான விஷயம்— இன்று என் வாசிப்பைக் கேட்பவர்கள், 'நீ மூர்த்தி சார் சிஷ்யன்தானே?' என்று தாமாகவே கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள். அந்தப் பெருமை அவரையே சாரும்.

**ராம்:**

பல முறை லால்குடி சாரின் கச்சேரியைக் கேட்டேன், காஸெட்டுகள் கேட்டேன். கர்நாடக இசையைப் பாடுவதைப் போலவே வயலினில் வாசிக்கும் அவருடைய பாணி ஒவ்வொரு முறையும் என்னை அசத்தியது. ஏற்கெனவே என். ராஜம் மற்றும் சதலபதி பாலசுப்ரமணியம் ஆகியோரிடம் வாய்ப்பாட்டு கற்றுக் கொண்டிருந்த நான், லால்குடி சாரிடம் வாய்ப்பாட்டு கற்றுக் கொள்ள விரும்புவதாகத் தெரிவித்த போது, அவ்விருவருமே மறுப்புத் தெரிவிக்காமல் முழு மனத்துடன் என்னை ஊக்குவித்தனர்.

லால்குடி சார் என்னைப் பாடச் சொல்லிக் கேட்டார். 'ஈச பாஹிமாம்' என்ற லால்குடி க்ஷேத்ர கீர்த்தனையைப் பாடினேன். மறுநாள் — சித்ரா பௌர்ணமி — முதலே என்னை வகுப்புகளுக்கு வரச் சொன்னார். அன்று முதல் இன்று வரை நாள் தவறாமல் அவர் வீட்டில் பாட்டு வகுப்புகளுக்குப் போகிறேன். வரையறையின்றி மணிக்கணக்கில் அவருடன் நேரம் செலவழிக்கிறேன். அவர் அண்மையில் இருக்கும் ஒவ்வொரு கணமும் ஏதேனும் புதிதாகக் கற்றுக் கொண்டேயிருக்கிறேன்; இன்னும் எவ்வளவோ கற்றுக் கொள்ளப் போகிறேன்...

தமது சொந்தக் குழந்தைகளை எப்படி நடத்துகிறாரோ, அதேபோல்தான் என்னையும் பிற மாணவர்களையும் நடத்துகிறார். பாட்டு விஷயத்தில் மட்டும் இன்றி எங்கள் படிப்பு, உடல்நிலை, மற்ற ஆர்வங்கள் என்று எல்லாவற்றிலும் சமமாகக் கவனம் செலுத்தி ஊக்குவிக்கிறார். ஆனால் இதற்காக உரிமை எடுத்துக் கொண்டு சலுகைகளை இவரிடம் எதிர்பார்க்க முடியாது. ரொம்ப ஸ்ட்ரிக்ட்... அதே சமயத்தில், தாம் கூறும் கருத்துக்களை மாணவர்கள் அப்படியே ஏற்றுக் கொள்ளணும் என்று வற்புறுத்தாமல் பாடங்களுக்கிடையே பல கலந்துரையாடல்கள் வைத்து, நாங்களே விவாதித்து, அறிவுபூர்வமாய், சரியான முடிவுகளை எட்டுவதற்கும் வகை செய்கிறார்.

இசை என்பது கச்சேரி செய்யும் கலை என்று மட்டுமே நினைத்திருந்த என்னை, அதன் உண்மையான தெய்வீக ஸ்வரூபத்தை, விச்வரூபத்தைக் காணத் தூண்டி, வழிகாட்டி வருகிறார்.

**சுமித்ரா, சுனந்தா, சங்கீதா:**

எங்கள் வாழ்க்கையிலேயே நாங்கள் எடுத்த மிக நல்ல முடிவு ராதா ஆன்டியிடம் நடனம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற முடிவுதான். சங்கராபரணம் அறக்கட்டளையின் கீழ் அவர் வழங்கிய நிகழ்ச்சியைப் பார்த்தோம். மெய் மறந்தோம். அவருடைய பல சிஷ்யைகளுள் சிலராகச் சகோதரிகளாகிய நாங்கள் எங்களையும் இணைத்துக் கொண்டோம்.

எங்கள் ஒவ்வொருவரிடமும் தனிப்பட்ட கவனம் செலுத்தித் திருத்துவார், கற்றுக் கொடுப்பார். அபிநயம் கற்றுக் கொள்ளும் போது, இவர் பெண் என்பதால், எங்களால் அவர் உணர்வுகளோடு சுலபத்தில் ஒன்ற முடிகிறது. வகுப்பு நடக்கும் போது படு சீரியஸாக இருக்கும் இவர், வகுப்புகள் முடிந்த பிறகு ஒரு தோழியாக — எங்களுக்குச் சமமாகப் பேசிப் பழகுவார்.

வகுப்பில் ஒரு டைரி இருக்கும். அதில் யார் யார் எத்தனை மணிக்கு வகுப்புக்கு வரப் போகிறோம் என்று குறித்துவிடுவோம். எல்லோருக்கும் ஒன்றாக வகுப்பு

நடத்துவது கிடையாது. தனித்தனியே ஒவ்வொருவருக்கும் முழுமையாக ஒரு மணி நேரம் வகுப்பு.

ராதா ஆன்டியிடம் சென்ற பிறகு நாங்கள் புதிய பிறவி எடுத்துவிட்டதைப் போல் ஒரு புத்துணர்வுடன் இருக்கிறோம்.

**மாத்யூ ஆலென்:**

லாஸ் ஏஞ்ஜெலஸ்ஸில் தங்கி, நான் இசையமைத்த பாடல்களைச் சில ரிக்கார்டு கம்பெனிகளிடம் விற்க முயன்று கொண்டிருந்தேன். மேற்கத்திய இசையில் நல்ல தேர்ச்சி இருந்தாலும் மனத்தில் என்னவோ நிறைவு இல்லை... முன்பு லண்டனில் மேளகர்த்தா ராகங்கள் பற்றிச் சித்தலிங்கப்பா என்பவர், வயலின் வாசித்தபடி உரை நிகழ்த்தியதைக் கேட்ட அனுபவம் பசுமையாய் நினைவிருந்தது. அவர் வயலினைக் கவிழ்த்துப் பிடித்து, சுவரத்துக்குச் சுவரம் மாறுவது தெரியாமல், இழைய இழைய கமகம் வாசித்தது என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தியிருந்தது. தொடர்ந்து அமெரிக்கா திரும்பி ஜான் ஹிக்கின்ஸைச் சந்தித்துப் பேசியிருந்தேன். இப்போது மீண்டும் அந்த இசை என்னை ஈர்க்க, ஹிக்கின்ஸைத் தேடிப் போனேன். அவர் தமது குரு டி. விஸ்வநாதனிடம் என்னை அறிமுகம் செய்து வைத்தார். வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் விஸ்வா நடத்திய இந்திய இசைப் பட்டப் படிப்பு வகுப்பில் சேர்ந்தேன். வேடிக்கை என்னவென்றால், நான் பிறந்து வளர்ந்த ஊருக்கு வெகு அருகே வெஸ்லியன் பல்கலைக் கழகம் இருந்த போதிலும், அதிலுள்ள இந்திய இசைப் பிரிவு பற்றியும் விஸ்வா பற்றியும் நான் முன்னமே அறிந்திருக்கவில்லை... ஹிக்கின்ஸ் சொல்லித்தான் தெரியும்!

அமெரிக்கக் கல்வி முறையில் ஆசிரியரை மாணவர்கள் கேள்வி கேட்பதும் எதிர்த்து விவாதிப்பதும் சகஜம். இது ஒரு பாரம்பரியம் என்றே சொல்லலாம். இந்திய குரு – சிஷ்ய உறவில் இது கிடையாது என்பதை அறிந்திருந்ததால் விஸ்வா எது சொன்னாலும், கேள்வி கேட்காமல் ஏற்பது என்று எனக்கு நானே பிரதிக்ஞை செய்து கொண்டேன். தமது கலையில் அவர் பூரணமானவர் என்பது எனக்குத் தெரிந்திருக்கிறது. ஆனாலும் இயல்புக்கு மாறாகக் கேள்வி கேட்காமல் பணிவது சில நேரங்களில் சிரமமாகவே இருக்கிறது. ஆனால் என்னைப் போல் எல்லா மாணவர்களும் இருப்பதாகக் கூற முடியாது. ஜூனியர் மாணவர்கள் ஓயாமல் கேள்வி கேட்பதையும் அவரெதிரே கால் நீட்டி அமர்வதையும் விஸ்வா சர்வ சகஜமாக எடுத்துக் கொள்கிறார். எனக்குக் குருவாக மட்டுமின்றி உற்ற நண்பனாகவும் விளங்குகிறார்.

தொகுப்பு: **சீதா ரவி**

புகைப்படங்கள்: **ஸ்ரீஹரி**

ஆம்ப்ரோ மில்க் பேஸ்

# ஸ்கூல் குழந்தைகளின் பிஸ்கெட்




**பாலில் உள்ள எல்லா ஊட்டச்சத்துக்களும் அடங்கியது.**

# சந்தானத்துக்குப் பட்டம்; செம்மங்குடிக்குப் பெருமிதம்!

சென்னை, தியாகராயநகர், சிவஞானம் தெருவில், பன்னிரண்டாம் எண் வீட்டு வாசலில் அந்தப் பிற்பகல் வேளையில் ஒரு சிறு பரபரப்பு. கார் ஒன்று கேட் அருகே வந்து நிற்க, அதிலிருந்து தம்பூரா சகிதம் இறங்கினார் செம்மங்குடி சீனிவாசய்யர். வீட்டுக்குள்ளிருந்து ஓட்டமும் நடையுமாய் வந்த மகாராஜபுரம் சந்தானம் அவரை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார். செம்மங்குடி ஒரு பெரிய ரோஜா மாலையைச் சந்தானத்தின் கழுத்தில் போட்டு மகிழ, சந்தானம் அவரை வணங்கி, இனிப்புகள் வழங்க, சங்கீதக் கடலின் இரு முத்துக்கள் சற்று நேரம் சந்தோஷக் கடலில் மிதந்தனர். பின்னணியில் தொங்கிய மகாராஜபுரம் விசுவநாதய்யரின் உருவப்படம், தமது இரு சீடர்களின் அமோக வளர்ச்சியையும் எண்ணி மகிழ்ச்சிப் புன்னகை பூத்து ஆசிர்வதிப்பதைப் போல் தோன்றியது.

செம்மங்குடி, விசுவநாதய்யர் வீட்டில் தாம் குருகுலவாசம் செய்த நாட்களை நினைவுகூர்ந்தார்:

''அய்யர்வாள் என்னைத் தமது மூத்த பிள்ளை என்றே சொல்லிக் கொள்வார். நான் தூக்கி வளர்த்த பிள்ளை சந்தானம். இன்றைக்குச் 'சங்கீத கலாநிதி' ஆகிறான்... எனக்குத்தான் இதில் அதிக சந்தோஷம். இந்தப் பரம்பரையில் ஆறாவது சங்கீத கலாநிதி ஆகிறான் சந்தானம்! உமையாள்புரம் சுவாமிநாதய்யர் முதல் சங்கீத கலாநிதி, இரண்டாவது அவர் சீடர் — மகாராஜபுரம் விசுவநாதய்யர், மூன்றாவது: அவர் சீடரான நான், நான்காவதும் ஐந்தாவதும் எனது சீடர்களான டி. என். கிருஷ்ணனும் டி. எம். தியாகராஜனும், இப்போது ஆறாவதாக சந்தானம்!

''சந்தானத்தின் திறமையைப் பற்றி நான் சொல்லவே தேவையில்லை. அப்பாவோடு பாடிப் பாடி மெருகேறி, தமது சொந்தத் திறமையன்றி வேறு சிபாரிசு இல்லாமல் வளர்ந்திருக்கிறான். அதுவும் கடந்த பதினஞ்சு வருஷத்து வளர்ச்சி அசாத்தியம்! ஜனாகர்ஷணம் தனாகர்ஷணம் இரண்டுமே நிறைஞ்ச வித்வான்'' என்று சொன்ன



* தொடரும் இசைப் பாரம்பரியம்: சந்தானம், செம்மங்குடி ஆகியோருடன் சீனிவாசன், ராமச்சந்திரன்.

செம்மங்குடி, சந்தானத்தின் இரு புதல்வர்கள் ராமச்சந்திரன், சீனிவாசன் ஆகியோர் இசைப் பாரம்பரியத்தைத் தொடர்கின்றது குறித்தும் மகிழ்ந்து பேசினார்:

''பொதுவா, மேதையா இருக்கக்கூடிய வித்வான்களுக்குப் பிள்ளைகள் நல்லபடியாகப் பிரகாசிக்க மாட்டார்கள் என்று சொல்வார்கள். அதற்கு விதிவிலக்கு உங்கள் குடும்பம். குடும்பக் கல்வி பற்றி ராஜாஜி அன்றைக்குச் சொன்னதை இப்போது நினைத்துப் பார்க்கிறேன். அது எவ்வளவு அர்த்தமுள்ள திட்டம் என்பது புரிகிறது.

''தமது தகப்பனார் பெயரில் சந்தானம் நிறுவியுள்ள அறக்கட்டளை அற்புதமான பணிகளைச் செய்து வருகிறது. அந்தப் பணிகள் வளர்ந்து மேலும் சிறக்க ஆண்டவனை வேண்டுகிறேன்.''



## தலைநகருக்கு வந்த செய்தி

"அமெரிக்காவில் முப்பத்தாறு கச்சேரிகள் செய்ய ஒப்புக் கொண்டு, புறப்பட்டு தில்லி போய்ச் சேர்ந்திருந்தேன். அங்கு நான் தங்கியிருந்த ஓட்டலுக்கு வந்து நண்பர் ஒருவர், சென்னையிலிருந்து போன் வந்ததாகவும், மியூசிக் அகாடெமியினர் எனக்குச் சங்கீத கலாநிதி விருது வழங்க முடிவெடுத்து, என் சம்மதத்தை எதிர்பார்ப்பதாகவும் கூறினார். நண்பர் மூலமே என் சம்மதத்தைத் தெரிவித்தேன்.

"இதற்கு இரண்டு நாட்கள் முன்னர்தான் எனது புதிய பஞ்சரத்தின கிருதிகள் காசெட்டைக் காஞ்சிபுரம் எடுத்துச் சென்று பரமாச்சாரியருக்குப் போட்டுக் காட்டினேன். அவர் அதை முழுதும் கேட்டுவிட்டு, பச்சை நிற சால்வை ஒன்றை எனக்குப் போர்த்தி, ஆசி கூறினார். பின்னோடு இந்தச் செய்தி வந்தது. அவர் ஆசியின் பலன் போலவே தோன்றியது."

— மகாராஜபுரம் சந்தானம்.

தமது குரு தமக்கு அளித்த தம்புராவைச் சந்தானத்தின் குடும்பத்தினருக்குக் காட்டினார் செம்மங்குடி.

"என் அண்ணா செம்மங்குடி நாராயணசாமி அய்யர், விசுவநாத அய்யரின் பிருகாவை மிகவும் சிலாகித்துச் சொல்வார். 'மற்றவர்கள் பிருகா எல்லாம் வண்டிக்குப் போடலாம்' என்பார்! என் குருநாதரின் சகோதரர்கள் கிருஷ்ண மூர்த்தி, மகாலிங்கம் ஆகிய இரண்டு பேரும் கூட நன்றாகப் பாடிக் கொண்டிருந்தவர்கள்.

"குருநாதரின் அறுபதாவது பிறந்த நாளுக்கு ஒரு ருத்திராட்ச மாலையைக் காணிக்கையாய்க் கொடுத்தேன். அவரோ, "எனக்குப் போய் இதெல்லாம் கொடுக்கிறாயே" என்று அதை என்னிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். அவர் கொடுத்த தம்புராவுடன் அதைப் பொக்கிஷமாகப் போற்றிப் பாதுகாத்து வருகிறேன்."

— சாருகேசி.

அட்டை வண்ணப்படம், புகைப்படங்கள் : யோகா.

# ஏழாவது இரவு

8

கதை: அபர்ணா நாயுடு
சித்திரம்:

அவனைக் கண்டு திடுக்கிட்ட மாலினி சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள். படபடக்கும் நெஞ்சைக் கட்டுப்படுத்த முயன்றாள்.

'கடவுளே! அவன் இந்தப் பக்கம் பார்த்து விடக் கூடாது...'

அவள் பயந்தது போல அது நடக்கவில்லை. அதற்குள் சிக்னல் விழுந்து விட்டது. தொடர்ந்து மோட்டார் சைக்கிள் வேகமாகப் போயே போய் விட்டது.

அதில் ஏற்பட்ட திருப்தி விரைவிலேயே மாறி விட்டது. அவர்களைக் கண்டதும் இன்ஸ்பெக்டர் முரளி அவர்களைப் பேசவே விடவில்லை. பெண்கள் இந்த விவகாரத்தில் ஈடுபடக் கூடாது என்று கூறி, அவர்களை வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்கும்படி ஆலோசனை சொல்லி அனுப்பி விட்டார்.

சோர்வுடன் வெளியே வந்தார்கள்.




நடந்தார்கள்.










அப்போது—
என்ன திட்டம் போட்டிருக்கே?
வண்டியை ஸ்டார்ட் பண்ணி வச்சுக்க.


பஸ்ஸுக்கோ, ஆட்டோவுக்கோ அவங்க தெருவை அந்த ஜீப்ராவில க்ராஸ் செஞ்சுதான் ஆகணும்.


புரிஞ்சுது. அந்த நேரத்துல வேகமாப் போய் மோதிட்டுப் போயிடணும்... அவ்வளவு தானே?
ஆமாம். வசதியா ஜன நடமாட்டம் வேற இல்லை.


சொல்லப் போனா... யோசிக்க, யோசிக்க, அந்த இன்ஸ்பெக்டர் மேல எனக்கு ரொம்பவும் சந்தேகம் அதிக மாயிட்டே போகுது.
அவர் அப்படி நடந்துக்க என்ன காரணம்?


அதே நேரத்தில் —
ம்... கமான்... வேகமாப் போய் மோது...
கார் சீறிப் பாய்ந்தது—
தொடரும்

**பாம்பே டையிங்**

# மாபெரும் விழாக்கால சலுகை







தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியிலுள்ள 115க்கும் மேற்பட்ட ஷோ-ரூம்களிலும், அங்கீகாரம் பெற்ற டீலர்களிடமும் மட்டும் கிடைக்கும்.

முந்துங்கள்!
இந்த அரிய வாய்ப்பு சில நாட்களுக்கு மட்டுமே/ஸ்டாக்குகள் தீரும் வரை.

FESTIVAL OFFER Organised and Sponsored by:

Bankers: The Federal Bank Ltd.

உங்களுக்காகவே... பாம்பே டையிங் வழங்கும் அரிய வாய்ப்பு! ஒவ்வொரு ரூ.400/- மதிப்புள்ள பாம்பே டையிங் துணி ரகங்கள் வாங்கும் போதும், ரூ.62.40 மதிப்புள்ள பாம்பே டையிங் சுந்தரம் லுங்கி இலவசம்! அல்லது, ஒவ்வொரு ரூ.250/- மதிப்புள்ள பாம்பே டையிங் துணி ரகங்கள் வாங்கும்போதும், ரூ.49.60 மதிப்புள்ள பாம்பே டையிங் ரான்சன் டெரிடவல் இலவசம்!

# பாம்பே டையிங்




பிரதமர்
உதவிப் பிரதமர்


தேர்தல் பந்தயத்திலே நீங்க கடைசியிலே வந்தீங்க... பரவாயில்லே.. இந்தாங்க ஆறுதல் பரிசு...
மாநிலத்துக்கு மந்திரி பதவி!
1
2
3


சந்திர சேகர் நாற்காலி


கஜானா காலி
விலைவாசி உயர்வு
சீக்கிய பயங்கரவாதிகள்



# கல்கி

1989 டிசம்பர் 17
மலர் 48 இதழ் 20
சுக்ல மார்கழி 2



## ஆரம்பம் அபசுரம்! ஆலாபனை அபாரம்!

மத்தியிலே பதவி ஏற்றுள்ள புதிய அமைச்சரவைக்கு நமது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். கூடவே நமது கவலைகளையும் வெளியிடாமல் இருக்க முடியவில்லை.

பிரதமர் தேர்ந்தெடுக்கப்பட்ட விதமே ஒரு கசப்புணர்வை ஏற்படுத்தித்தான் விட்டது. நாடாளுமன்ற அல்லது சட்டமன்ற ஆளும் கட்சி கூடித் தங்களுக்குள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுப்பது மரபு. போட்டியிருந்தால் வாக்கெடுப்பு நடத்துவது ஜனநாயகக் கோட்பாடு. இந்த விதிமுறைகளைப் புறக்கணித்து மேலிடத்து உத்தரவுப்படி ஒருவரை ''ஏகமனதாகத்''. தேர்ந்தெடுக்கும் நாடகத்தைக் காங்கிரஸ் ஆட்சியில் நாம் நிறையவே கண்டிருக்கிறோம். கிட்டத்தட்ட அதே முறையைத்தான் ஜனதா தளமும் உத்தரப்பிரதேசத்திலும் ஹரியானாவிலும் கையாண்டிருக்கிறது. உ. பி.யில் முலாயம் சிங் யாதவ் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் அஜீத்சிங் பிரிவினர், வி. பி. சிங் எதிர்ப்புக் கோஷம் எழுப்பிப் பிரதமரையே சேவலப்படுத்தியிருக்கின்றனர். அஜீத் சிங்குக்கு மத்திய மந்திரி பதவி அளித்து அவரைப் பிரதமர் இப்போதைக்குச் சமாதானப்படுத்தியிருக்கிறார். எந்தப் பரம்பரை ஆட்சி கூடாது என்று தேசிய முன்னணி பிரசாரம் செய்ததோ அதே பரம்பரை ஆட்சி ஹரியானாவில் வேரூன்றத் தேவிலால் வழிவகுத்திருக்கிறார்.

தேவிலாலின் சாமர்த்தியம் பிரமிக்க வைப்பதாக உள்ளதே தவிர, சம்மதிக்கத்தக்க தாக இல்லை. பிரதமர் பதவிக்குத் தேர்தல் நடப்பதைத் தவிர்க்கத் தாமே அப் பதவிக்குப் போட்டியிடுவதாக நடித்து, பிறகு தமக்குக் கிடைத்த ஏகமனதான ஆதரவை அப்படியே வி. பி. சிங்குக்கு மாற்றி வழங்கியது, சந்திரசேகரைச் சமாளிக்க ஒரு தற்காலிகத் தீர்வேயன்றி நிரந்தரப் பரிகாரம் ஆகாது. மாறாகப் பிரதமர் பதவிக்குத் தேர்தல் நடந்து, சந்திரசேகர் தோற்கடிக்கப்பட்டிருந்தால் பிரச்னை அதோடு முடிந்து போயிருக்கும். இப்போது கோபமும், வருத்தமும் அடைந்துள்ள சந்திரசேகர், பிரதமர் பதவி ஏற்பு வைபவத்தையும் புறக்கணித்து, அமைச்சரவையிலும் இடம்பெற மறுத்து, பகை உணர்வுகள் மேலும் வளர வகை செய்துள்ளார். ஜனதா தளப் பொதுக் காரியதரிசி யஷ்வந்த் சின்ஹா அமைச்சர்கள் பதவி ஏற்பு வைபவத்துக்கு வந்து விட்டு வாசல் படி தாண்டாமல் திரும்பிப் போயிருக்கிறார். ஆளும் கட்சியில் உட்பூசல்களை வைத்துக் கொண்டு வெளியே இருந்து கிடைக்கும் இதர கட்சிகளின் ஆதரவுடன் ஆட்சி நீண்ட காலம் நிலைக்க முடியாது.

வி. பி. சிங்குக்குத் தாம் செய்த உதவிக்குப் (ஏகமனதான தேர்வு) பரிசாகத் தேவிலால் துணைப் பிரதமர் பதவியைப் பெற்றிருப்பதுடன், ''இங்கு எல்லாருமே பிரதமர்கள்தாம்'' என்று ஆணவம் காரணமாகவோ, அசட்டுத்தனம் காரணமாகவோ பேசிக் கொண்டிருக்கிறார்!

இத்தனை இருட்டையும் விரட்டும் ஒளி போன்று, பிரதமர் வி. பி. சிங் நாட்டுக்குச் செய்த முதல் ஒலி—ஒளிபரப்பு விளங்குகிறது. ரகசியங்கள் அற்ற அரசு; செய்திகளை மக்கள் அறிந்து கொள்ளும் உரிமை; ரேடியோ — டி.வி. ஆகியவற்றை அரசு இலாகாவாக இல்லாமல் தனி நிறுவனங்களாக்குதல்; பத்திரிகை சுதந்திரத்துக்குப் பாதுகாப்பு; கிராமப்புறங்களில் தொழில் வளப் பெருக்கம்; மெய்யான பஞ்சாயத்து ராஜ்யம்; அதிகாரங்களைப் பரவலாக்குதல்; தேசிய ஒருமைப்பாடு; லோக்பால் அமைப்பது; ஜனநாயக நிறுவனங்களின் கௌரவத்தை மதிப்பது; போன்ற பல உன்னதமான செயல் திட்டங்களை அவர் காவியநயத்தோடு வெளியிட்டது நெஞ்சைக் குளிர்வித்தது. சொற்கள் செயலாகி நாடு சுபிட்சம் பெறட்டும். அமைச்சர்களும் அதிகாரிகளும் மக்களின் வரிப் பணம் தங்கள் சொந்தச் சொத்து அல்ல என்பதை உணர்ந்து பயபக்தியோடு கையாண்டு, நாட்டுக்குப் பயன்தரத்தக்க விதமாக ஒவ்வொரு ரூபாயையும் செலவிட்டால் போதும், தேசம் மேல்நாடுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு முன்னேறும்.

பெரும்பான்மை பலமின்றி ஓர் அரசு செயல்படுவதில் ஒரு நன்மையும் உண்டு. ஆட்சி நிலைக்க வேண்டும் எனில் சதா எச்சரிக்கை தேவை. சுறுசுறுப்பாகவும் இயங்கியாக வேண்டும்; அதே சமயம் நன்கு யோசித்தும் செயல்பட்டாக வேண்டும். தவறுகள் நிகழ அனுமதிக்கவே முடியாத நிலை. இத்தகைய ஒரு நிர்ப்பந்தத்துக்கு உள்ளாவதால் நல்லாட்சி மலர நிறையவே வாய்ப்புண்டு.

காங்கிரஸும் ஆட்சியைக் கவிழ்ப்பதே நோக்கமாகக் கொள்ளாமல், இப்போது கிடைத்திருக்கும் அவகாசத்தை உட்கட்சி ஜனநாயகம் செயல்படவும் கட்சி பலப்படவும் பயன்படுத்திக் கொள்ளுமானால் அதற்கும் நல்லது; தேசத்துக்கும் நன்மை.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# பாரத மக்களே பேசியது போல்...

• மக்கள் நலனை மறந்து விட்டு, ஊழல் உலகைக்குள் தலையை விட்டுத் தவிக்கும் அரசியல்வாதிகளுக்குத் தேர்தல் மூலம் தக்க தண்டனையாக 'ஆட்சி இரக்கம்' செய்த பாரத மக்களே பேசியது போல் இருந்தது. தலையங்கம்; பாராட்டுக்கள்!

பொகலூர், அ. இராஜப்பன்.

• அமரர் அகிலனின், சித்திரப்பாவை, சின்னத் திரையில் சிறப்பாகப் பவனி வந்து கொண்டிருப்பதைப் பற்றிய சுவையான பல தகவல்களை, நுணுக்கமாகத் தயாரித்து வெளியிட்டிருக்கிறீர்கள். கதையாசிரியரின் மன உணர்வுகளுக்கும், அதைப் படித்து ரசித்த ரசிகர்களின் ரசனைக்கும் ஏற்றவிதத்தில் சித்திரப் பாவையைத் தயாரிக்க, அதன் தயாரிப்பாளர்கள் எப்படியெல்லாம் கடுமையாக உழைத்திருக்கிறார்கள் என்பதைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியது, கட்டுரை. ரசிகர்களின் எண்ணத்தையும் சேகரித்து வெளியிட்டதால், இது ஒரு முழுமையான ஆராய்ச்சிக் கட்டுரையாகவே இருந்தது.

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

• ஜி.எச்.எல். மணியனின் "ஒரு கனவின் நிழல்," நமக்கந்தியின் "வியாபார எழுத்து" சத்யப்ரியனின் "மனிதர்கள்," தமிழினியனின் "மேகலா ஏன் மறுத்தாள்" ஆகிய சிறுகதைகள் நல்முத்துக்களாய் ஜொலித்தன. அதே சமயத்தில் வெகு இயல்பாய் மனத்தோடு ஒன்றின.

புதுவை — 3, லீலாவதி கிருஷ்ணவேலு.

• 'வியாபார எழுத்து' சிறுகதை படித்தேன். வாழ்க்கை, இலக்கியம் இவ்விரண்டுக்கும் உள்ள உறவு பற்றி அழகாகச் சொல்லி, விஸ்வநாதனைத் தன் தவறை உணரச் செய்த மூர்த்தி, என் சிந்தனையோடு ஒட்டி விட்டான்.

கடலூர் — 2, ஆர். வேலுமணி.

• 'மனிதனிடம் உள்ள உள்ளுரை சக்தியை வெளிப்படுத்தி மனம், வாழ்க்கை இவைகளுக்கிடையே சரியான தொடர்பு ஏற்படுத்துதலே உண்மைக் கல்வியாகும் என்றார் அரவிந்தர். இதைக் கடைப்பிடிக்கும் ஜீவாசிரமம் தாகூரின் சாந்திநிகேதனைப் போல இந்தியாவின் மறுமலர்ச்சி மையமாக விளங்கட்டும்.

தக்கோலம், ஆ. பூசாரி.

• 'குடில்களில் வளரும் குபேரர்கள்...' கட்டுரையைப் படித்தேன். ஜீவாசிரமம் பள்ளி தமிழகத்திற்குப் புதியதல்ல — நம்முடைய குருகுலம் முறையின் நகல்தான். மூட்டை மூட்டையாகப் புத்தகங்களைத் தந்து, படிக்கச் சொல்லி மாணவர்களை வெறும் ஏட்டறிவே பெறச் செய்யும் தற்கால நவீன பள்ளிகளுக்கிடையே மாணவர்களின் மனஉறுதியையும் கல்வி அறிவையும் வளர்க்கும் ஜீவாசிரமம் போன்ற பள்ளிகள் நிறையத் தேவை.

புதுவை — 1, பழ. திருமலை.



• அகமதாபாத்தில் நடந்த என்.எஸ்.எஸ் தேசிய ஒற்றுமை கூட்டத்தில் தங்களை மதிக்கவில்லை என்று ஆர்.கே. ஜேக்கப் சொல்லியிருப்பது அவருக்கு மட்டுமல்ல — தமிழனாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட ....ஏன் இழைக்கப்பட்ட இழுக்காகும்...

சிதம்பரம் — 1, ராஜ் அண்ட் ராஜ்.

• 'சோகம் நிறைந்த தீபாவளி' என்ற தலைப்பில் வெளிவந்த செய்தியைப் படித்துத் திடுக்கிட்டேன். இந்தத் துணுக்கைப் படித்தவர்கள் எதிர்காலத்தில் கண்டிப்பாக இந்த மாதிரி அசட்டையாக இருக்க மாட்டார்கள் என்பது திண்ணம்.

சீர்காழி, புவனாப்பிரியன்.

## வட்ட மேஜை

• கல்கி வழங்கிய தீபாவளி பரிசுகள் வாசகர்களுக்கு நல்ல முறையில் பயன்பட்ட விதம் பற்றிப் படிக்கையில் மனம் நிறைவடைந்தது. பாராட்டுக்கள்.

கோவை, உமார்த்தி.

• 'கல்கி'யின் தீபாவளி பரிசு நமக்குக் கிடைக்கவில்லையே என வருத்தப்பட்ட நான், பரிசுகளைப் பெற்ற வாசக சகோதர — சகோதரிகளின் பூரிப்பை, மன உணர்வுகளைப் படித்தபின் மிகவும் மகிழ்ச்சியுற்றேன். பரிசு பெற வில்லையே என்ற வருத்தம் போயே விட்டது.

மதுரை — 1, பிரபாகர் ப்ரியன்.

• கல்கி 26.11.89 இதழில் கமலா கந்தசாமி எழுதிய "எதிர்கால இந்தியா உருவாகிறது" என்னும் சிறுகதைமிகவும் சிறப்பாகவும் அழகாகவும் இருந்தது. ஆனால் மேல் நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு ஏ.இ.ஓ. அலுவலகத்தில் பில் தயாரிக்கும் வேலை கிடையாது. நடுநிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு தான் ஏ.இ.ஓ. அலுவலகத்தில் பில் தயாரிப்பார்கள். இன்ஸ்பெக்டருக்கு ஜீப் கிடையாது. இந்த இரு சிறு தவறுகள் தவிர்த்திருந்தால் சிறுகதையின் சிறப்பு மிகவும் அதிகமாக இருந்திருக்கும்.

போந்தவாக்கம், திமா. இராகவன்.

(தவறுகள் கதாசிரியருடையவை அல்ல. பிழைகள் நேர்ந்தமைக்கு வருந்துகிறோம். ஆசிரியர்)







# "மாதங்களில் மார்கழி நான்."

பகவான் கூறுகிறார்:

சூரியோதயத்துக்குச் சற்று முன்புள்ள நேரம் பிரம்ம முகூர்த்தம் எனப்படுகிறது. ஆத்ம சாதனத்துக்கு அது சிறந்த வேளையாகும். மனிதர்களுடைய ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள் ஆகும். தை மாதமாகிய உத்தராய புண்ணிய காலம் அவர்களுக்கு சூரியோதயம். அதிலிருந்து உத்தராயணம் ஆறு மாதம் அவர்களுக்கு பகல். ஆடியிலிருந்து மார்கழி வரையில் தக்ஷிணாயணம் அவர்களுக்கு இரவு. அதில் மார்கழி மாதம் விடியற்காலம் தேவர்களது நாளில் பிரம்ம முகூர்த்தமாகிறது. அப்பொழுது செய்யும் தேவாராதனை, வந்தனை, வழிபாடு முதலியன மனதை நன்கு பண்படுத்த வல்லவைகளாம். இங்ஙனம் மார்கழி மாதம் புலனடக்கம், கடவுள் வழிபாடு ஆகியவைகளோடு முழுதும் இணைக்கப்பட்டிருக்கிறபடியால் மாதங்களுள் தாம் மார்கழி மாதம் என்கிறார் பகவான்.

## ஸ்வீட்களில் சிறந்தது கிராண்ட் ஸ்வீட்ஸ்

**இனிப்புகள்:—** மங்களூர் போளி, ரஸமலாய், ஸோன்பப்டி, இனிப்பு சோமாஸ், பொரிவிளங்காய் உருண்டை, தேங்காய் கோவா குங்குமப்பூ ஹல்வா.

**காரவகைகள்:—** தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, சீடை, ஸ்பெஷல் மிக்ஸர், சீப்புச்சீடை, இரயில்கட்டிடம், வறுபயறு, விஜிடபிள் சமோசா.

**பொடிவகைகள்:—** கருவேப்பிலைபொடி, பருப்புப்பொடி, இட்லிபொடி, ரசப்பொடி, சாம்பார்பொடி, உறுகாய்பொடி.

**திருமண வைபவங்களுக்கு:—** சீர்முறுக்கு, சீர்அதிரசம், முள்ளுத்தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால், அப்பம் முதலியன.





**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557



# விருது பெறும் கலைஞர்கள்



படம் உதவி: சுருதி.

## வீடு தேடி வந்த விருது

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைடியின் 'சங்கீத கலா சிகாமணி' விருது பெறும் கே. வி. நாராயணசுவாமி சொன்னார்: ''காரியதரிசி ராமச்சந்திரனும் உதவிக் காரியதரிசி சீனிவாசனும் வீட்டுக்கு வருவதாக போன் செய்தார்கள். கச்சேரிக்குத் தேதி கேட்க என்றால் போனில் சொன்னால் போதுமே என்றேன். இல்லை, வீட்டுக்கே வருகிறோம் என்றார்கள். வந்த பிறகு ''உங்களுக்கு இந்த வருடம் 'சங்கீத கலா சிகாமணி' விருது வழங்க முடிவு செய்திருக்கிறோம், உங்கள் சம்மதத்தை நேரில் தெரிந்து கொண்டு போகவே வந்தோம்'' என்றார்கள். மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டதுடன் என் குருநாதர்களில் ஒருவரான சி. எஸ். கிருஷ்ணய்யர் அவர்களை, நான் விருது பெறும் நாளன்று வந்து இரண்டு வார்த்தைகள் பேசக் கேட்டிருக்கிறேன்.

''விருதுகளும் கௌரவங்களும் நம்மை இன்னும் விழிப்புடன் இருக்கச் செய்கின்றன. நன்றாகப் பாடுகிறார் என்று பெயர் எடுத்துவிட்ட பிறகு இப்படிப்பட்ட விருதுகள் கொடுக்கப்படுவதால் பொறுப்பு அதிகமாகிறது'' எனக் கூறும் கே. வி. என்னுக்குக் கச்சேரியின் இடையிடையே கரகோஷம் செய்வது பிடிக்கவில்லை. ''கச்சேரி ஆரம்பமாவதற்கு முன்னால் மேடையில் வந்து அமர்ந்ததும் ஒரு முறை; கச்சேரி முடிந்த உடன் ஒரு முறை — கரகோஷம் செய்தால் போதுமே? நடு நடுவே கரகோஷம் செய்து அமைதியான சூழ்நிலையைக் கெடுப்பானேன்?'' என்று கேட்கிறார்.

## அமெரிக்காவிலிருந்து.....

ஸ்ரீ கிருஷ்ண கான சபாவின் 'நிருத்ய சூடாமணி' விருது பெற அமெரிக்காவிலிருந்து வருகிறார் கமலா — வழுவூர்ப் பாணியை வழுவாது பாதுகாத்துப் பரப்பி வருபவர். ஐம்பது வருட நடனப் பணியைப் பாராட்டி அவருக்கு வழங்கப்படும் விருது என்றுகூடச் சொல்லலாம். (சென்ற வருடமே இவருக்கு வழங்கப்பட இருந்தது; ஆனால் அவரால் கடைசி நிமிடத்தில் வந்து பெற முடியாது போயிற்று.) அமெரிக்காவில் சம்பிரதாய முறையில் பரதநாட்டியம் சொல்லிக் கொடுத்து வரும் கமலாவுக்கு, ஏராளமான அமெரிக்க மாணவிகள் இருக்கிறார்கள். (சில மாணவிகளுக்குக் காரில் விரைந்து சென்று கற்பித்து வருவதும் உண்டு.)

கமலா எத்தனை நடன நிகழ்ச்சிகள் வழங்கியிருப்பார்? 'சுமாராக மூவாயிரத்துக்கு மேலே' என்றார் ஒரு விமர்சகர்!

— சித்தார்த்

# கல்பலதிகா

கல்பலதிகா: பெயரில் உள்ள நளினமும் கவித்துவமும் இந்த இளம் பெண்ணின் நடனத்திலும் இருக்கின்றன. கூச்சிப்பூடியின் துரித கதிக்கு ஏற்ற அளவான உடற்கட்டு, இனிமையான தோற்றம். இவருடைய உழைப்பும் ஆர்வமும் கச்சிதமான இவர் நடனத்தில் தெரிகின்றன. விமர்சகர்கள் பலரின் ஏகோபித்த பாராட்டைப் பெற்ற இந்த முன்னணி நடனமணியின் குரு...? வேறு யார்...? வேம்பட்டி சின்னசத்யம்தான்!

மூன்று வயது முதலே கல்பலதிகா கண்கொட்டாமல் நடன நிகழ்ச்சிகளைப் பார்ப்பாராம். கொஞ்சம் விவரம் தெரிந்ததும் இவர் அசந்தது பத்மா சுப்ரமண்யத்தின் நாட்டியத்தைப் பார்த்து. பிறகு ஷோபா நாயுடு ஆடியதைக் கண்டதும் கூச்சிப்பூடி மீது இவருக்கு நாட்டம் வந்துவிட்டது. இசையிலும் நடனத்திலும் தேர்ச்சி பெற்றிருந்த இவரது தாயார் இவர் ஆர்வத்தை உணர்ந்து, வேம்பட்டியின் கூச்சிப்பூடி அகாடெமிக்கு அழைத்துச் சென்றார். ''இவ்வளவு சிறிய பெண்ணை எப்படிச் சேர்த்துக் கொள்வது...? இன்னும் இரண்டு வருஷம் போகட்டும்'' என்று சொல்லிப் பார்த்தார் சின்னசத்யம். ஆனால் கல்பலதிகாவுக்குத் திரும்பிப் போக மனமில்லை. ''நீங்கள் இவளுக்குச் சொல்லிக் கொடுத்துப் பாருங்கள், உங்களுக்குத் திருப்தியாயிருந்தால் தொடர்ந்து வகுப்புகளுக்கு வரட்டும்'' என்று அம்மா கேட்டுக் கொண்டதன் பேரில் குரு ஒப்புக் கொண்டார். அன்று தொடங்கிய கல்பலதிகாவின் நாட்டியப் பயிற்சி, பத்தாண்டுகளாக இடைவெளியின்றி ஒரு தவம்போல் தொடர்ந்து வருகிறது. தனியாகவும், குருவின் குழுவில் ஒருவராகவும் பலமுறை அரங்கேறி விட்டார்.

''கூச்சிப்பூடி நிகழ்ச்சிகள் வழங்குவதையே என் வாழ்க்கையின் இலட்சியமாகக் கருதுகிறேன். தற்போது படிக்கும் பி. ஏ. (அரசியல்) படிப்பை முடித்துவிட்டு, சட்டம் பயில வேண்டும் என்றும் ஆசை இருக்கிறது. இரண்டையும் எவ்வளவு தூரம் வெற்றிகரமாகச் செய்ய முடியும் என்று பார்க்க வேண்டும்... இப்போதே அடிக்கடி கல்லூரி முதல்வர் முன் நின்று 'அட்டென்டன்ஸ்' போதாமைக்குக் காரணங்காட்டி விளக்க வேண்டியிருக்கிறது...'' என்கிறார் கல்பலதிகா.

''மாஸ்டரின் வகுப்பில் நான்தான் எல்லாக் கலைஞர்களிலும் ஜூனியர் கலைஞர். அதனால் அவர் என்னை ஒரு சிறு குழந்தை போலவே நடத்துவார். நன்றாக ஆடினால், ''ஐஸ்கிரீம் வாங்கித் தருகிறேன், வா'' என்று அழைத்துப் போய் வாங்கித் தருவார்; என்று கூறும் கல்பலதிகா, வகுப்பில் ஜூனியராய் இருந்தாலும் நாட்டியத்தில் 'சீனியர்'தான்.

— எஸ். ஆர்.








# இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் திரட்டப்பட்ட இணையற்ற-எழில்மிகுந்த பட்டுச் சேலைகள்!

*எங்களது பிரத்தியேக பட்டு விற்பனை நிலையங்கள்*

**தில்லையாடி வள்ளியம்மை**

**பட்டு மாளிகை**

350, பாந்தியன் சாலை, எழும்பூர்,
சென்னை-600 008. போன்: 860775

**தாமரை**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
314-315, ராஜு வீதி,
கோயம்புத்தூர்-641 001.

**பவளம்**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
365, நேதாஜி சாலை,
பெரியார் மன்றம், ஈரோடு-638 001.

**கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை**

57, தேர் நிலையம்,
சேலம்-636 001. போன்: 64651

**அமுதசுரபி**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
12 & 14, தேரடி கடை வீதி,
திருச்சி-620 002. போன்: 25034

**ரேஷம்தாரா**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
சபீனா பிளாஸா (முதல் அடுக்கு)
84, 85, இன்பேன்டரி சாலை,
பெங்களூர்-560 001.

**குஷ்பூ**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
16 & 17, புது மார்க்கெட், திலக் சாலை,
அபிட்ஸ், ஹைதராபாத்-500 001.



DIPR/1379/MS/89/ET

# ஆராரோ ஆரிரரோ



பாக்யராஜின் பார்வையில் ஒரு கனம் வந்து கவிழ்ந்து விட்டது. இருந்தாலும் இயல்பான சிலுமிஷம் இடையிடையே அப்பிக் கொண்டிருக்கிறதோ பிழைத் தோமோ!

வித்தியாசமான கதைதான். சொத்து வாரிசு பிரச்னை. தன்னைக் கெடுத்த வனைப் பழிவாங்கத் தன் வயிற்றில் வளரும் அவன் பிள்ளைக்கு வேறொரு அப்பாவி நல்லவனை அப்பனாக்கி, பறி போகவிருந்த சொத்துக்களைப் பாதுகாத்துக் கொள்கிறாள். அதற்கான போராட்டங் களில் வரும் குளறுபடிகளின் நிரவல்தான் முழுப் படமுமே! பட சஸ்பென்ஸ் படு பாந்தமாய்க் காப்பாற்றப்பட்டிருக்கிறது. தொய்வில்லாத திரைக்கதை.

மனநல மருத்துவமனைக்கு உள்ளே இருப்பவர்களுக்கும் வெளியே நடமாடிக் கொண்டிருப்பவர்களுக்கும் இடையில் பெரிய வித்தியாசமில்லை என்பதைக் காட்சிப் பிரமாணமாய்க் காட்டி, ஆகை யால் சகோதர, சகோதரிகளே அவர்களைக் கேலி செய்வதோ பார்த்துச் சிரிப்பதோ அடுக்காது என்று ஆரம்பத்தில் மகா உத்த மோத்தம உபதேசமாய் அறிவுரை வழங்கு கிறார். ஆனால் தொடரும் நிகழ்ச்சிகளை யெல்லாம் மனநல மருத்துவமனையில் உள்ள நோயாளிகளின் விதவிதமான காரெக்டர்களை சேட்டைகளோடு சுட்டிக் காட்டி, அதை வைத்துத்தான் சிரிக்க வைத்திருக்கிறார், 'ஊருக்கடி உபதேசம்; உனக்கல்ல கண்ணே!' என்றபடி. அந்த உபதேசம் இல்லாதிருந்தாலாவது இதை மன உறுத்தலின்றி அனுபவித்திருக்கலாம்!

ஃபாதர் ஜெய்கணேஷ், பக்கபலமான சாட்சிகளை வைத்துக் கொண்டு, 'அந்தப் பொண்ணைக் கெடுத்தது நீயில்லேன்னு மட்டும் சொல்லிடாதே!' என்று கேட்க, பாக்யராஜ் நின்று நிதானித்து ஓர் உரசல் ரேகை காட்டி, கடைசியில் போகக்கென்று, 'யெஸ் ஃபாதர். அந்தப் பொண்ணைக் கெடுத்தவன் நான்தான்', என்று சொல்லும் போது நமக்கே ஒரு திக். பைத்திய வேடம் போடும் பானுப்ரியா ஆட்டுவிக்கிறபடி யெல்லாம் பாக்யராஜ் ஆடும் கட்டங்களில் செமை கிளுகிளுப்புத்தான்.

பானுப்ரியா அசல் பைத்தியமாய் இருக்க முடியாது என்ற சம்சயம் ஏனோ ஆரம்பத் திலேயே ஏற்பட்டு விடுகிறது. இருந்தாலும் அந்த வேடமிட்ட சேட்டையிலும் அள்ளு கிறார். பாதிரியாரிடம் பாவ மன்னிப்புக் கோரிய பிறகு நடிப்பிலே ஒரு பரிமாணம் காட்டியிருக்கிறாரே வாரே வாஹ்!

ஜெய்கணேஷ் அத்தனை தீவிரம் காட்டிக் குற்றம்சாட்டி எந்த பாபுவைக் குற்றவாளி என்று நம்பிக் கொண்டிருந்தாரோ அவன் நிரபராதி என்பதை உணர்ந்து, 'ஓ, காட்!' என்று அதிரும் சமயம் தன்னிரக்கத்தில் தொட்டிருக்கிறார்.

ஏதோ கொஞ்சம் தொய்கிற மாதிரி என்று கருதும் கட்டத்திலே முந்தானையை வரிந்து கட்டிக் கொண்டு வருகிறார் பாருங் கள் மனோரமா ஆச்சி, 'அலேக்' பண்ணி விடுகிறார். வில்லனின் உருட்டலில் விழுந்து விட்ட மாதிரி பதுங்கல் காட்டி, அப்புறம் ஒரு பாய்ச்சல் எடுப்பது சிலிர்ப்புத்தான்.

புதுமுக வில்லன் தேவலாம். அந்த உச்சரிப்பு மழலை ஒரு ப்ளஸ் பாயிண்ட் தான். பாயிண்ட் நம்பர் ஒண்ணு, பாயிண்ட் நம்பர் ரெண்டு என்று வரிசையாய்க் கட்ட விழ்த்து, பாக்யராஜின் சிறைவாச வாய்ப்பை வில்லன் விரித்துரைக்க, அந்த ஒவ்வொரு பாயிண்ட்டையும் பாக்யராஜ் உடைப்பது வசன பேஷ்!

உதிரிகளாய் வரும் பைத்திய காரெக்டர் ஒவ்வொன்றுக்கும் உச்சகட்டத்தில் ஒரு பர்ப்பஸ் கொடுத்திருக்கும் சாமர்த்தியத் துக்கு டைரக்ஷனைப் பாராட்டலாம்.

பாக்யராஜ் தன்னை முழுசாய்க் காட்ட ணும் என்றால் 'ஃபேமிலி சப்ஜக்ட்'டோட நிற்கணும். வேறே பக்கம் திரும்பறது டேஞ்சர். பரவாயில்லை, இது ஆரஞ்சு தான்.

— பி. எஸ். எஸ்.



"'எல்லாம் இங்கிலீஷ் மீடியம் ஸ்கூல், காலேஜ்னு தேடிப் போயிட்டு இருக்கிற காலத்துல... கம்ப்யூட்டர் அது, இதுன்னு வந்திருக்கிறப்ப, நீங்க மட்டும் ஏண்டா இப்படிப் பண்டாரம் மாதிரி வேஷ்டியைக் கட்டிக்கிட்டு இருக்கீங்க?' — இப்படிச் சிலர் எங்களைப் பார்த்துக் கேட்கத்தான் செய்யறாங்க..."

# இல்லாத வீட்டுப் பிள்ளைகள் பெறும் இசைச் செல்வம்

இருள் பிரியாத காலைப் பொழுது. பழனி மலைக்கு நேர் பின்புறம் கிரி வீதியில் பழைமையான ஒரு கட்டடத்திலிருந்து நயமான நாதஸ்வர ஒலி எழுகிறது. கட்டடத்திற்குள் சென்று பார்ப்பவர்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருக்கிறது. பன்னிரண்டு வயதிலிருந்து பதினாறு வயதுக்குட்பட்ட இளைஞர்கள் காலை நான்கு மணிவாக்கில் எழுந்து குளித்து விட்டு நெற்றியில் பட்டையாய்த் திருநீரும், சந்தன குங்குமமும் இட்டுக் கொண்டு, நீளமாய் இரண்டு வரிசைகளாய் உட்கார்ந்து கொண்டு தவுல் — நாதஸ்வரம் 'சாதகம்' பண்ணிக் கொண்டிருக்கின்றார்கள். பழனி தேவஸ்தானம் நடத்தும் தவுல் மற்றும் நாதஸ்வரக் கலைக் கல்லூரி வளாகத்தில்தான் இந்தக் காட்சியைக் கண்டோம். எழுப்பி விட அலாரம் இல்லை; உலுக்கி உட்கார வைத்து, 'சாதகம் செய்' என்று மிரட்டி மேற்பார்வையிட வாத்தியார் கூடவே நிற்பதில்லை... சுய உந்துதலால் ஆசையுடன் இசைக்கின்றனர் இந்தச் சிறுவர்கள். ஓடுகின்ற நாகரிக கால ஓட்டத்தில் காலம் காலமாய்ப் போற்றிக் காத்து வந்த நாதஸ்வர இசைக் கலை நசித்துப் போகாமல் காக்க இந்தப் பிஞ்சுகளின் கரங்கள் நீண்டுள்ளன!

* ஜெகதீஸ்வரன்:
"இலங்கை முழுவதும்...



* பத்மநாதன்:
...கச்சேரி பண்ணுவோம்..."



திருவிழாக்களிலும் கோவில்களிலும் தவுல்—நாதஸ்வரக் கலைஞர்கள், எந்த எந்தக் கட்டடத்துக்கு எப்படி வாசிக்க

வேண்டுமோ அப்படி ஒரு முறையாக வாசிப்பதில்லை என்ற குறை சில காலம் முன் இருந்து வந்தது. அக் குறையைப் போக்கப் பழனியில் சிறந்த வித்வான்களை வைத்து நாதஸ்வரக் கலைஞர்களுக்கு முறையாகப் பயிற்சி கொடுக்கப்பட்டது. அத்துடன் இக் கலை வாழையடி வாழையாய் வளர வேண்டும் என்பதற்காகத் திருவிடை மருதூர் பி. எல். வீருசாமி பிள்ளையும் — டி. என். ராஜரத்னம் பிள்ளையும் முயற்சி எடுத்தார்கள். 1957 ஆம் ஆண்டு விதைத்த அந்த விதைதான் இன்று வேர் விட்டுக் கிளைத்து அறுபத்தி ஐந்து மாணவர்கள் படிக்கின்ற "அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் நாதஸ்வரம் — தவுல் கலைக் கல்லூரி", என்ற பெயரில் பெரிய அளவில் விழுது விட்டுள்ளது.

குருகுல முறைப்படி நடக்கிற இந்தக் கல்லூரியில் வெளிநாட்டிலிருந்தும், பிற மாநிலங்களிலிருந்தும் மாணவர்கள் ஆர்வமுடன் வந்து படிக்கின்றார்கள். மூன்று ஆண்டுகள் இவர்களுக்கு இலவசமாகப் பயிற்சி அளிப்பதோடு படிக்கின்ற காலத்தில் உணவு, உடை (வருஷம் ஒரு வேஷ்டி, துண்டு) தங்குவதற்கு விடுதி வசதி ஆகியவற்றையும் தேவஸ்தானமே இலவசமாக வழங்குகின்றது. விடுமுறை என்று பெரிய அளவில் எதுவும் கிடையாது. மூன்றாண்டு படிப்புக்குப் பின்பு மாணவர்கள் பரீட்சை கொடுக்க வேண்டும். பிரபல வித்வான்களும் மதுரை இசைக் கல்லூரி ஆசிரியர்களும் வந்து ஒவ்வொரு மாணவனையும் தனித் தனியே சுமார் முப்பது நிமிடங்கள் கேள்வி கேட்டும் வாசிக்கச் செய்தும் பரீட்சிப்பார்கள். 'சிறப்பு', 'முதல்', 'இரண்டாம்', 'மூன்றாம்' வகுப்பு என மாணவர்கள் தகுதிப்படி தேர்வுச்



* டி. ஆர். ராஜகோபால்: அன்பான...



* நல்லகுமார் பிள்ளை: ஆசிரியர்கள்.

சான்றிதழ்களைத் தேவஸ்தானம் வழங்கி வருகின்றது.

மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்க நாதஸ்வர வித்வான் டி. ஆர். ராஜ கோபால், தவுல் வித்வான் கலைமாமணி இலுப்பூர், ஆர். சி. நல்லகுமார் பிள்ளை ஆகியோரை தேவஸ்தானம் முழு நேர ஆசிரியர்களாக நியமித்துள்ளது. இரண்டு ஆசிரியர்களுமே தங்களுடைய பெரும் பான்மை நேரத்தை மாணவர்களுடனே செலவு செய்கிறார்கள்.

**நா**தஸ்வரக் கல்லூரி கட்டடத்திலிருந்து கூப்பிடு தூரத்தில் 'தவுல்' கல்லூரிக் கட்டடம். காலை எல்லா மாணவர்களும் சாதகம் பண்ணி முடித்தவுடன் ஒரு ஹாலில் கூடுகின்றார்கள். கோவிலிலிருந்து ஓதுவார்கள் வந்து மாணவர்களுக்குத் 'தேவாரம்' கற்றுக் கொடுக்கின்றார்கள். காலை உணவு முடிந்ததும் வகுப்புகள் ஆரம்பமாகி விடுகின்றன. ஆசிரியர், எதிரே உட்கார்ந்து பயிற்றுவிக்க, மாணவர்கள் ஒரே மட்டமாய் வரிசையாக அமர்ந்து கொண்டு, முன்னால் 'சிலம்பக்கட்டை' எனப்படும் 'மினி தவுலை' வைத்துக் கொண்டு (தவுல் எடுத்து வைத்துப் பிடிக்



ரசிகை:

''ராக ஆலாபனையின் போது 'நற நற'ன்னு பல்லைக் கடிக்கிற சப்தம் கேட்டுண்டே இருந்தது!''

கடவித்வான்:

''அதுவா, நான் முறுக்கு சாப்பிட்டுண்டே இருந்தேன்!''



''என்ன கச்சேரி ந டு வி லே கலாட்டா?''

''அதுவா? பாகவதர் கைவீசித் தாளம் போடும் போது ஜாலாக இருந்த மோதிரம் எங்கேயோ விழுந்துடுத்து. தேடறாங்க!''

''என்ன சார், சுருதி சேர்க்க மிருதங்கத்தைத் தட்டிட்டு, பாகவதர் தலையிலேயும் தட்டறாரே...?''

''மிருதங்கம் மாத்திரமா...? பாகவதரும் சுருதியோடு சேரல்லே!''





துக் கொள்ளச் சிறுவர்களால் முடியாது) அழுத்தம் திருத்தமாய் வாசிக்கக் கற்றுக் கொள்கின்றார்கள். கன்னத்துச் சதை துடி துடிக்க, விழி உருட்டி, தலை அசைத்து, உதடு மடித்து... அடேயப்பா! அந்த இளம் முகங்களில்தான் எவ்வளவு தீவிரம்!

''எல்லாம் இங்லீஷ் மீடியம் ஸ்கூல், காலேஜுன்னு தேடிப் போயிட்டு இருக்கற காலத்துலே... கம்ப்யூட்டர் அது இதுன்னு வந்திருக்கறப்ப, நீங்க மட்டும் ஏண்டா இப்படி பண்டாரம் மாதிரி வேஷ்டியைக் கட்டிக்கிட்டு இருக்கீங்க?'' — இப்படிச் சிலர் எங்களைப் பார்த்துக் கேட்கத்தான் செய்யறாங்க. ஏனோ எங்களுக்கு இந்த இசைதான் உசிரா இருக்கு. எங்காவது கல்யாண வீடுகள்ல நாதஸ்வர இசை கேட்டுட்டா அப்படியே உட்கார்ந்துடுவேன். சில சமயம் என்னையும் அறியாம அழுகை வந்துடும். அந்த ஆர்வத்திலேதான் அப்பாட்ட அடம் பிடிச்சு படிப்பை நிறுத்திட்டு, இங்கே வந்து சேர்ந்திருக்கேன். இப்ப எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு சார்! பெரிய வித்வானா வரணும்ன்ற துடிப்புல கருத்தா படிக்கிறேன்'' என்றார் பதினான்கு வயது பி. பாலசுப்பிரமணியன்.

மலேசியாவிலிருந்து 'தவுல்' கற்க வந்துள்ள பதினைந்து வயது கணேசனுடன் பேசினோம். ''நான் பத்தாம் வகுப்பு பாஸ் செய்திருக்கேன். எனக்குப் படிப்பை விட இசையில் அதிக நாட்டம். எங்க தாத்தா தவுல் வித்வான். எனக்குத் தவுல் கத்துக்கணும்னு ஆசை! தாத்தாவிடம் சிறிது கற்றுக் கொண்டேன். முறைப்படி குருகுல வாசத்துல கத்துக்கிட்டா நல்லதுன்னுதான் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கேன். எனக்கு இந்தச் சூழ்நிலை ரொம்பப் பிடிச்சிருக்கு. படிப்பு முடிஞ்சதும் தாத்தா கூட கொஞ்ச காலம் கச்சேரி பண்ணுவேன். அடுத்து தனியா கச்சேரிகளுக்குப் போகலாம்னு திட்டம் வைச்சிருக்கேன். மலேசியாவில் நாதஸ்வரக் கலைஞர்களுக்கு இங்கிருப்பதை விட மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. சிறப்பா வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான பணமும் கிடைக்கும்'' என்று கூறினார்.

**யா**ழ்ப்பாணத்திலிருந்து ஜெகதீஸ்வரன் — பத்மநாதன் என்ற சகோதரர்கள் படிக்க வந்துள்ளார்கள். அண்ணன் ஜெகதீஸ்வரன் 'தவுல்' வகுப்பிலும், தம்பி பத்மநாதன் 'நாதஸ்வர' வகுப்பிலும் சேர்ந்து படிக்கின்றார்கள். ''நானும் அவனும் கோர்ஸ் முடிஞ்சதும் 'மேளசெட்டு கட்டி' ஸ்ரீலங்கா முழுவதும் போய்க் கச்சேரி பண்ணணும்னு இருக்கோம்'' என்று மிகுந்த உற்சாகமாகக் கூறினார் ஜெகதீஸ்வரன்!

முகம் சிவந்து, கன்னம் உப்பி, சுவர் பார்த்து நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருந்தார் வேல்முருகன் என்ற பதினைந்து

வயது மாணவர்.

''முதல்ல நாதஸ்வரத்தை எங்களால தூக்கிப் பிடிக்கவே முடியலை! கை நிற்கலை. சப்தமும் வரலை. எனக்கு உதடே பிடிக்கலை...! இப்பப் பார்த்திங்களா எப்படி வாசிக்கிறேன்? 'சிவாஜி' பழகுகின்ற வரைக்கும் மெதுவாகத்தான் இருக்கும். இதிலே பெரிய ஆளா வரணும்னு தான் படிப்பை விட்டுட்டு வந்திருக்கேன். எங்க விரல்களை மென்மையா வைச்சிருக்கணும். அப்பத்தான் பிசிரு தட்டாம பார்த்துக்க முடியும்'' — என்றார்.

**த**வுல் ஆசிரியர் கலைமாமணி நல்லகுமார் பிள்ளை சில விஷயங்களைச் சொன்னார்: ''இங்கே படிச்ச சர்டிபிகேட் வாங்கியவர்களுக்கு தேவஸ்தானங்களிலும், ரேடியோ, டி.வி., மற்றும் சபாக்களிலும் அதிக வாய்ப்பு கிடைக்கும். எங்க கல்லூரி பழைய மாணவர் சாமிநாதன் எம். ஜி. ஆர். ஆட்சியிலே 'அரசவைக் கலைஞரா' இருந்திருக்கிறார். இன்னும் எத்தனையோ பேர் வெளியிலே பிரமாதமா கச்சேரி பண்ணிட்டு வர்றாங்க. இங்கே படிக்க வர்றவங்க எல்லாருமே தங்களோட சொந்த ஆர்வத்திலேதான் வர்றாங்க! இசையைப் பொழுதுபோக்கிற்காகவோ, கூடுதல் தகுதிக்காகவோ படிக்க வரலை. எல்லாம் இல்லாத வீட்டுப் பிள்ளைங்கதான். இனி இதுதான் தங்கள் வாழ்க்கைன்னு தீர்மானிச்சு வர்றாங்க... நாங்களும் ஒரு செட் மாணவர்களைச் சேர்த்துக் கொண்டால் மூன்று வருடங்களுக்கு வேறு மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளாமல் அவர்களிடமே முழுக் கவனம் செலுத்துகிறோம். மூன்றாம் வருட இறுதியில் ஒரு செட் மாணவர்கள் வெளியேறிய பிறகுதான் இன்னொரு செட்டைச் சேர்த்துக் கொள்கிறோம். மாணவர்கள் நல்லபடியா கற்று, இந்த இசை காலம் காலமாய் இந்தப் பூமியில் தழைத்து வளரணுமேன்னு அந்தத் தண்டாயுதபாணியைத்தான் தினமும் வேண்டிக்கிறேன்.''

**— பாரதிபாலன்**

வண்ணப்படங்கள்: **யோகா**

---

## அருள்வாக்கு

**ம**லையாளக் கதகளியில் ஒரு தினுஸு பார்க்கிறோம். அதில் வாயால் எதுவும் பேசாமல் எல்லாரும் ஊமை போலவே ஆடுவார்கள். ஆனாலும் பலவிதமான மனோபாவங்களை கை, கால், புருவம், உதடு இவற்றின் அசைப்பினாலேயே தெரிந்து கொண்டு விடுவோம்.



'கதைகளி' என்பதுதான் கதகளி என்று நாம் சொல்வது. களி என்றால் தமிழில் களிப்பு; ஆனந்தம். களிப்பிலே டான்ஸ் ஆடத் தோன்றுகிறது. 'களிக் கூத்தாடுவது' என்கிறார்கள். அதனால்தான் அம்பலக் கூத்தனுக்குத் திருவாதிரை உத்ஸவம் பண்ணி ஸமர்ப்பிக்கிற நைவேத்யத்தைக் 'களி' என்கிறோம். மலையாளத்தில் களி என்றாலே கூத்து என்று அர்த்தம் பண்ணிக் கொண்டார்கள். ஒரு கதையைக் கூத்தாக ஆடிக் காட்டுவதற்குக் 'கதைகளி' என்று பேர் வைத்தார்கள்.

மனோபாவத்தை வாயால் சொல்வது, அங்கத்தால் அபிநயித்துக் காட்டுவது, மனோபாவம் இன்னதென்று சொல்ல முடியாமலே போனாலும் வெறும் ராக ஆலாபனையாலும்,தில்லானாவினாலும் ஆனந்தத்தை உண்டாக்குவது என்று பலவிதமிருந்தாலும் எல்லாம் 'அழகு' என்ற ஒன்றினால் ஆத்மாவுக்கு நிறைவு ஏற்படுத்துவதைச் சேர்ந்ததுதான்.

அத்தனை அழகுக்கும் ஆதாரம் ஈச்வரன்தானே?

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# வட்டங்கள்



கடைசி பூரியை எண்ணெயிலிருந்து சாரதா எடுத்துக் கொண்டிருந்த போது கூடத்தில் பவித்ராவின் குரல் கேட்டது.

வந்ததும் வராததுமாய் ''ஐயோ அஸ்வின், எவ்வளவு பூரிடா திம்பே? வெயிட் லிஃப்டிங் சாம்பியனா ஆகப் போறியா என்ன?'' என்று தம்பியைச் சீண்டுவதும், பதிலுக்கு அவன், ''ஒட்டடைக் குச்சியெல்லாம் டான்ஸ் ஆடும் போது நாங்கள்லாம் பயில்வானா ஆகக் கூடாதோ!'' என்பதும்...

'ச்சே! சரியான அரட்டைகள்!' என்று சாரதா அலுத்துக் கொள்வதற்குள், இடுப்பில் கையைக் கொடுத்துப் பின்னாலிருந்து இறுக அணைத்தபடி வந்து நின்றாள் பவித்ரா.

''ஹாய் மாம்!''

''என்ன பவி இது! வேர்வையோட கசகசன்னு! வரவர சின்னக் குழந்தை மாதிரி நடந்துக்கறே!. நகர்ந்து நில்லு....''

இம்மி கூட நகராமல் இன்னமும் அதிகமாக இறுக்கினாள் பவித்ரா.

''நகர முடியாத்! அப்படித்தான் கட்டிப்பேன்!''

''பவித்ரா! பிஹேவ் யுவர்செல்ப்! ஒழுங்கா கை அலம்பிண்டு வந்து டிபனைச் சாப்பிடு! எனக்கு நிறைய வேலையிருக்கு!''

''மாட்...டேன்! நீயே ஊட்டி விடு! நான் இப்படியேதான் நிக்கப் போறேன்!''

''டோண்ட் பீ ஸில்லி... வந்த உடனே எங்கிட்டே வம்புக்கு நிக்காதே! டிபனைச் சாப்பிட்டுட்டுப் போய் வேலையைப் பாரு!''

எரிச்சலோடு கையைத்தள்ளி விட்டுச் சிடுசிடுத்த அம்மாவைப் புருவத்தைச் சுருக்கி ஏறிட்டாள் பவித்ரா. பின் சின்னக் குரலில், ''கோவமா இருக்கியாம்மா?'' என்றாள்.

சாரதாவிடமிருந்து பதிலேதும் வரவில்லை.

தட்டில் நாலு பூரிகளையும் உருளைக் கிழங்கையும் போட்டு டேபின் மேல் 'தடால்' என்ற சப்தத்தோடு வைத்தாள்.

அடுப்பிலிருந்து எண்ணெய்ச் சட்டியை இறக்கி மேடை ஓரமாக வைத்து விட்டு, அதே அடுப்பில் குக்கரை ஏற்றினாள்.

ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அரிசியைக் களைந்து போட்டு, ஜலம் ஊற்றி மூடினாள்.

தன்னையே கவனித்துக் கொண்டு நின்றிருந்த பவித்ராவிடம் திரும்பி, ''சொல்லச் சொல்ல அப்படியே நின்னா என்ன அர்த்



காலேஜுக்கு அவ 'வாக்மேன்' கொண்டு வந்திருந்தா... அதிலே, இளையராஜா வோட 'ஹவ் டு நேம் இட்?' காஸெட்டைப் போட்டுக் கேட்டேம்மா... ப்பா... ரியலி ஃபண்டாஸ்டிக்! அப்படியே... மிதக்கற ாதிரி.... உருகற மாதிரி.... வாவ்! என்னமா க்கு தெரியுமா? நீ கேட்டா உருகிப் ிடுவேம்மா! அதிலே எனக்கு ஒண்ணு ாங்கிக் கொடும்மா, ப்ளீஸ்! ப ஸ்டீரியோல அதைப் போட் கேக்கணும்!''

தொண தொணன்னு பேசா மல் போய்ப் படி! அதெல் அப்புறமா பார்த்துக்

தம்? சாப்பிடுன்னு தனியா ஒரு தரம் உபசாரம் பண்ணணுமா?'' என்றவள், தனக்கும் ஒரு தட்டில் டிபன் எடுத்து வைத் துக் கொண்டு சாப்பிடத் தொடங்கினாள்.

அம்மாவின் கோபம் தன்னைப் பாதிக் காதவளாய், ''என்னயா ஹெவி வெயிட் சாம்பியன், அதுக்குள்ளே எழுந்திட்டே? போறுமா?'' என்று சீண்டியவாறு சாப் பிட்ட பவித்ரா திடுமெண, ''அம்மா, யூ நோ வாட்?'' என்றாள்.

'என்ன' என்று சாரதாவிடமிருந்து கேள்வி ஏதும் இல்லை.

''என் பிரெண்ட் தீபா இல்லே? இன்னிக்கு

''படிக்கிறதா?'' கண்ணகல வினவிய பவித்ரா அந்த வார்த்தையை நம்ப மாட்டா மல் சிரித்தாள்.

''உனக்கு என்ன ஆச்சு மம்மி? நேத்துத் தானே பரீட்சை முடிஞ்சுது? ரெண்டு நாள்ல ஹாலிடேஸ் கூட ஆரம்பமாகப் போறது. இப்பப் போய் எதைப் படிக்கச் சொல்றே....? ஹா... ஹா... உன்னை மடக் கிட்டேனா, மம்மீ...?''

சிரித்தவளை எரிச்சலுடன் சாரதா

**சிவசங்கரி**

முறைத்தாள்.

"சரி, படிக்க வேண்டாம்... டான்ஸ் கிளாஸுக்குப் போறது... இல்லாட்டா வீணையை எடுத்து வெச்சுண்டு வாசிக்கறது... இதுக்குக் கூட தார்க்குச்சிப் போடணுமா? வீணையைத் தொட்டு ஒரு மாமாங்கம் ஆகப் போறது!"

"ஐயோ... ப்ளீஸ் மம்மி, ஹாவ் எ ஹார்ட்! அதெல்லாந்தான் லீவுல பண்றேன்னு சொன்னேனே! இப்ப நீ வா என் கூட. லஸ்ஸுக்குப் போய் காஸெட் வாங்கிண்டு வரலாம்மா... ப்ளீஸ்!"

எழுந்து வாஷ்பேசினில் கை அலம்பின சாரதா, குக்கரில் வெயிட் பொருத்தினாள்.

"அம்மா... ப்ளீஸ்... நாப்பது ரூபாய்க்குள்ளதாம்மா இருக்கும் அது! வாங்கி ஒரு தரம் கேட்டுப் பார்த்தேன்னா, அப்புறம் எத்தனை ரூபா வேணுன்னாலும் கொடுக்கலாம்னு நீயே சொல்லுவே! ப்ளீஸ்ம்மா..."

சாரதா ஆத்திரமாகத் திரும்பினாள்.

"ப்ச்... என்ன பிடுங்கல் இது! ஒரு தரம் சொன்னா தெரியாது? டான்ஸ், வீணைன்னு கத்துக்கறதுல குறைச்சல் இல்லே! மாசா மாசம் இத்தனை ரூபாயைக் கொட்டி அழறதுக்குத் துளியாவது சாதகம் பண்ண வேண்டாம்? கேட்டா, இப்ப வேண்டாம், அப்ப வேண்டாம்னு தப்பிச்சுக்க வேண்டியது!"

"நான் ஒண்ணும் தப்பிச்சுக்கலேம்மா! ஒரு மாசமா பரீட்சைக்குப் படிக்க வேண்டியிருந்தது அதான் சாதகம் பண்ணலே! எக்ஸாம் இருக்கிறப்போ எப்படி ப்ராக்டீஸ் பண்றது...! நீயே சொல்லு..."

"ஏட்டிக்குப் போட்டியா பேசினா ஆச்சா? நேத்தியோடத்தான் பரீட்சை முடிஞ்சு போயிடுத்தே? சாயங்காலம் வந்தாவது வீணையைத் தொட்டியா நீ? ராத்திரி கூப்பிடக் கூப்பிடக் காதுல விழாம ரூம்ல ஸ்டீரியோவை அலற விட்டுண்டு பாட்டு கேட்டாச்சு... போறாததுக்கு அஸ்வின் வேறே மிருதங்கத்தை வெச்சுண்டு படார் படார்னு நேரம் காலம் இல்லாம அடிக்கிறான்! இதென்ன வீடா இல்லே சந்தைக் கடையா? இங்கே வேலைக்காரி வரலையேன்னு ரெண்டு நாளா நான் பிராணனை விட்டுண்டு மன்றாடறது பத்தி உங்களுக்குக் கொஞ்சமாவது அக்கறை இருக்கா? இதிலே எலெக்ட்ரிஸிடி பில் கட்ட இன்னிக்குத்தான் கடைசி நாள்னு வெயில்ல அலைஞ்சு கட்டிட்டு, அப்புறமா வந்து அவசர அவசரமா டிபன் பண்ணி வெச்சா... ஏதோ சாப்பிட்டோம், போய் பிராக்டீஸ் பண்ணினோம்னு இல்லாம அதை வாங்கலாம் இதை வாங்கலாம்னு ஒரே நச்சு! ச்சே... டிஸ்கஸ்டிங்! உங்கப்பா மாதிரி நானும் எங்கேயாவது ஊருக்கு ஒழிஞ்சாத்தான் உங்களுக்கெல்லாம் புத்தி வரும்!"

பவித்ரா தட்டிலேயே கையை உதறி விட்டு எழுந்தாள்.

"என்னம்மா இது! ஏய் டூ யூ பிக் வொர்ட்ஸ்? என்ன கேட்டுட்டேன்னு இப்படி நீ கத்தறே?"

"இன்னும் என்ன கேட்கணும்? நான் சொல்றதைக் காதிலேயே போட்டுக்காம நீ பாட்டுக்குச் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிண்டிரு..."

அவளை முடிக்கவிடாமல் பவித்ரா குறுக்கிட்டாள்.

"ஒரு சின்ன காஸெட் வாங்கித் தரச் சொன்னா தப்பா அது?"

"தப்புதான்... தர்க்கம் பண்ணாம போ பவி! இப்ப எதுவும் வாங்கித் தர முடியாது!"

பவித்ரா சரேலென்று நகர்ந்து வாஷ்பேசினில் கையைக் கழுவினாள்.

"இதை அப்பவே சொல்லிட்டுப் போறது தானே! இதுக்காகப் போய் எதுக்காகக் கத்தித் திட்டணும்? உனக்கு வேறே என்னமோ கோபம்... அதை எங்கிட்டே காட்டறே! ச்சே... எவ்வளவு நல்ல மூட்ல வந்தேன், எல்லாம் போச்சு!"

பெண்ணின் சலிப்பு சாரதாவின் கோபத்தை அதிகமாக்கி உரத்த குரலில் கத்த வைத்தது.

"என்னாலயா மூட் போச்சு? கொஞ்சமாவது பொறுப்போட பேசறியா நீ? டான்ஸ் பிராக்டீஸ் பண்ணு, வீணை வாசின்னு சொன்னா அது 'மூடை'க் கெடுக்கறதா?"

"டோண்ட் ஸ்க்ரீம் மம்மி! இப்பல்லாம் நான் எது செஞ்சாலும் குத்தம் கண்டுபிடிக்கறதே உனக்கு வேலையா போச்சு... டான்ஸ் பண்ணினா தாளம் சரியாயில்லே, வீணை வாசிச்சா சுருதி சேரலே, அப்புறம்..."

சாரதா கைகளைக் குறுக்கே நீட்டி அவளைத் தடுத்தாள்.

"நிறுத்து! எதிர்த்துப் பேசாதே! சரியா ஆடலேன்னா சொல்லத்தான் செய்வேன்! கன்றாவியா வாசிச்சாக்கூட புகழ்ந்துண்டே இருக்க முடியுமா என்ன?"

"ஓ.... அம்மா.... ப்ளீஸ்! நீ ஒண்ணும் புகழ வேண்டாம்! திட்டாம இரு போறும்! வர வர எதிலேயும் என்னை என்கரேஜ் பண்றதே இல்லே! எப்பப்பாரு அது நன்னா இல்லே, இது குத்தமாயிருக்கு... இதே க்ரிடிஸிஸம்தான். எனக்கு எதுவுமே செய்யப் பிடிக்கலே... இனிமே வீணையைக் கிணையைத் தொடறேனா பாரு!"

— பவித்ரா கோபத்துடன் அகன்றாள்.

"பாகவதர் கடனுக்குப் பாடறார் சார்!"

"எப்படி அவ்வளவு கரெக்டாச் சொல் றீங்க...?"

"பாகவதர் சபா செக்ரட்ரிகிட்ட வாங்கிய கடனை அடைக்கத்தான் பாடறார்! இன்னும் பாக்கி இருக்கு...!"

என்ன பேச்சு பேசுகிறது இந்தப் பெண்! வார்த்தைக்கு வார்த்தை எதிர் வாயாடுகிறது, சரளமாய்ச் சமாதானம் சொல்கிறது!

என்ன செலவானாலும் பரவாயில்லை, பெண்ணுக்கு அத்தனை கலைகளிலும் தேர்ச்சி இருக்க வேண்டும் என்ற என் தவிப்பு இவளுக்குப் புரியவே இல்லையே?'

தேடித் தேடி நல்ல ஆசிரியர்களாகப் பிடித்து நடனமும், வீணையும் சொல்லிக் கொடுக்கச் செய்ததோடு, தப்பாமல் தினம் கூட நின்று அவள் ஒழுங்காகப் பயிற்சி செய்கிறாளா என்று கவனித்து, அவற்றை நன்றாகச் செய்ய வேண்டும் என்பதற்காகவே அவள் தலையில் வேறு பொறுப்புகளைக் கட்டாமல்... என்ன கஷ்டப்பட்டு என்ன? கடுகத்தனையாவது புரிகிறதா இந்தப் பெண்ணுக்கு?

அந்தக் காலத்தில் எனக்கு இப்படி யாராவது அனுசரணையாய் இருந்திருந்தால் இத்தனை நேரம் பெரிய வித்வாம்ஸினியாக வந்திருப்பேன்! குறைந்தபட்சம், மனசுக்குப் பிடித்த பாட்டைப் பிடித்த நேரத்தில் கற்பனை லயம், சேர்த்து இழைத்து இழைத்து வாசித்து...

எங்கே!

யார் விட்டார்கள் அதற்கு!

**நா**லு வயசிலேயே அம்மாவைப் பறிகொடுத்தாயிற்று. அவள் ஸ்தானத்துக்கு வந்த சித்திக்கு, பட்டுப் புடைவையும், வைரத் தோடுமாய் மினுக்கிக் கொண்டு கச்சேரிகளில் போய் உட்கார்ந்து, ரசிக்கிற மாதிரி பாவனை செய்யத் தெரிந்ததே தவிர இசையில் பெரிய நாட்டம் ஏதுமில்லை.

'அதெல்லாம் நமக்கு வராது! பகவானோட கிருபை இருக்கணும் தெரியுமோ?' என்று முயற்சியற்ற அதிர்ஷ்டத்தின் மீது தான் சித்திக்கு நம்பிக்கை இருந்தது.

அவளை அரும்பாடுபட்டுச் சம்மதிக்க வைத்து, ஒரே நேரத்தில் பத்து மாணவிகளுக்குச் சொல்லிக் கொடுக்கிற ஆசிரியரிடம் போய் வீணை கற்றுக் கொள்வதே பெரும்பாடாக இருந்தது.

அந்தப் பத்திலும் சாரதாவின் ஆர்வத்தையும், சிரத்தையையும் இனம் கண்டு கொண்ட ஆசிரியர், 'உன் விரல் நன்னாப் பேசறதும்மா! வீட்டுல ஒரு வீணை வாங்கி வெச்சுண்டு சாதகம் பண்ணினா இன்னும் வேகமா கை பிரளும்' என, சித்தியைக் கெஞ்சிக் கூத்தாடி வீணை வாங்குவதற்குள் முழி பிதுங்கித்தான் போயிற்று.

வாங்கினப்புறம்தான் என்ன, ஒழுங்காய் முறையாய்ச் சாதகம் செய்ய முடிந்ததா என்ன?

ம்ஹூம்.

சுருதி சேர்க்க டீச்சரிடம் கற்றுக் கொண்டதும், வீட்டுக்கு வந்து புது வீணையில் முயற்சி செய்து பார்த்த அன்றே சித்தியின் விமர்சனங்கள் துவங்கி விட்டன.

முதல் மீட்டு மீட்டியதுமே, 'என்னது இது! 'டொய்ங்... டொய்ங்'னு கம்பி சப்தம் வருதே? நாதமே நன்னா இல்லியே?' என்றாள். தாளத் தந்திகளை மீட்டி முடிப்பதற்குள், 'பாத்திரத்துல பேர் வெட்டறாப்பல என்ன கீறல் சப்தம் இது!' என்றாள்.

தொடர்ந்து எப்போது சாரதா வீணையும் கையுமாய் உட்கார்ந்து கொண்டாலும், 'ஐயோ, அபஸ்வரம் தாங்கலை! இதான் உங்க டீச்சர் சொல்லித் தர அழகாக்கும்! கணீர்ன்னு நாதம் எழுப்ப வேண்டாமோ? நான்தான் அப்பவே சொன்னேனே, இது உனக்கெல்லாம் வராதுன்னா வராதுதான்!' என்றாள்.

இத்தனை குட்டல்களையும் மீறிக் கொண்டு பள்ளிப் பருவத்தில் துவங்கியது கல்லூரி வரை தொடர்ந்து, இடது கை ஆள்காட்டி, நடு விரல்களில் கறுப்புக் கோடு நிரந்தரப் பதிப்பை ஏற்படுத்திய போது சாரதாவுக்குக் கல்யாணம் நிச்சயமாயிற்று.

**சி**த்தியாவது தேவலாம், விமர்சனங்களுக்கு நடுவில் வாசிக்கவாவது அனுமதித்தாள்; இங்கே மாமியார் மகராசி, இசைக்கு முழக்கணக்கு கேட்கிறவளாக அமைந்திருந்தாள்.

திருமணமான முதல் வாரத்தில், ஒரு நாள் மாலை சுவாமி விளக்கேற்றி வைத்து விட்டு வீணையைத் தொட்ட உடனேயே சொல்லி விட்டாள். 'இங்கே பாருடீம்மா... பூஜை அறைல படத்தோட படமா வேணுன்னா இதையும் ஒரு மூலைல சாத்தி வைச்சுக்கோ! இப்படி நட்ட நடுப்புற உட்கார்ந்து வாசிக்கிறதெல்லாம் வேண்டாம்! நம்ம வீட்டில் அதெல்லாம் பழக்கமில்லே!' என்று.

பொறுக்க முடியாமல் கணவன் கோபாலிடம் ஓர் இரவு ஆரம்பித்த போது, 'ப்ளீஸ் சாரதா... இதெல்லாம் என் வரைக்கும் வர வேண்டாமே! அம்மா புடிக்கலேன்னு சொன்னா விட்டுடேன்!' என்றான் அசுவாரஸ்யமாக.

அவனுடைய சித்தி பெண் ஒருத்தி, பாட்டு கற்றுக் கொள்கிறேன் பேர்வழி என்று கிளாஸுக்குப் போய் வந்தவள், ஒரு நாள் சொல்லாமல் கொள்ளாமல் அந்த வாத்தியாரோடு ஊரை விட்டே ஓடி விட்டாளாம்; அதிலிருந்து அவர்கள் குடும்பத்துக்கே பாட்டும், இசையும் சத்ருவானது





"'பாட்டுப்பட்டி சகோதரர்கள்'னு போட்டிருக்கு. எட்டுப் பேர் பாடறாங்களே...?"

"ஆமா சார், அவங்க மொத்தம் எட்டு சகோதரர்கள்."

தான் நிஜம்!

"வீணை எங்கே போகப் போறது? அப்புறமா சந்தர்ப்பம் கிடைக்காமலா போய் விடும்?" என்று அவள் தனக்குத் தானே செய்து கொண்ட சமாதானத்துக்கு அர்த்தமே இல்லாமல் போயிற்று.

ஆனால் யாரையோ பழி வாங்குகிற மாதிரி, பவித்ரா பிறந்த உடனேயே எக்கச் சக்கமாய்ச் சந்தோஷப்பட்டு, அவளை இசையின் இனிமைக்குப் பழக்கினாள்.

குட்டக் குட்டத் தலை தாழ்ந்தே போய் நிமிர முடியாமலே போய் விட்ட தன்னைப் போலல்லாமல் பவித்ராவாவது சிறந்த வாசிப்பில்....

**சா**ரதாவின் கை பாத்திரம் தேய்ப்பதை ஒரு கணம் நிறுத்தியது.

பவித்ரா என்ன சொல்லி விட்டுப் போனாள் இப்போது? 'எனக்கு ஊக்கம் கொடுக்கா விட்டாலும், பழிக்காமலாவது இரு!' என்றுதானே கத்தி விட்டுப் போனாள்?

எனக்குச் சித்தி செய்ததையேதான் நான் பவித்ராவுக்கும் செய்து கொண்டிருக்கிறேனா?

எத்தனைக்கெத்தனை விரும்பி அவளைக் கலைகளில் ஈடுபட வைத்தேனோ, அத்தனைக்கத்தனை இப்போது எரிந்து விழுகிறவளாக ஏன் மாறிப் போனேன்? என்ன ஆகி விட்டது எனக்கு?

அதுவும் இந்த மூன்று மாசங்களாக, கோபால் ஓர் அலுவலக வேலையாக டெபுடேஷனில் ஜெர்மனி போன நாளாக, நல்ல குணங்கள் அத்தனையும் விடை பெற்றுத்தான் போய் விட்டன.

சோப்புக் கையுடன் நாற்காலியில் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்ட நிமிஷத்தில் கோபால் ஊரில் இல்லாதது தனக்கு மட்டும்தான் குறையா, குழந்தைகளுக்கு இல்லையா என்கிற கேள்வி அவளுள் எழுந்தது.

ஏன் இல்லாமல்...?

அதையெல்லாம் விட்டு விட்டு எதையும் பெரிசுபடுத்தாமல் குழந்தைகள் சகஜமாக இல்லையா என்ன?

அப்படியென்ன அடங்காப்பிடாரி குழந்தையா பவித்ரா? படிப்பில் முதல் ஐந்து ராங்க்குக்கு உள்ளாகவே வருகிறவள்; 'கால்ல ஜதி களீர் களீர்னு என்னமா விழறது' — என்று பரதநாட்டிய ஆசிரியரிடம் பாராட்டு பெற்றவள்...

ஏன்... ப்ளஸ் டூ படிக்கும்போதே ஏதோ விழாவில் 'பைரவி' ராக வர்ணத்தை மூன்று காலத்திலுமாக விறுவிறுவென்று வீணையில் வாசித்துக் கைதட்டல்களைப் பெற்றவள்தானே?

ஆரம்பத்தில் அவளைத் தட்டிக் கொடுத்துக் கலைகளில் ஈடுபடுத்தியவள் இப்போது அப்படியா நடந்து கொள்கிறேன்?

என்னமோ இல்லாததைக் கேட்டு விட்ட மாதிரி எதற்காக அப்படி கத்தினேன்? வெயிலில் அலைந்து காத்திருந்து, எலெக்ட்ரிசிடி பில் பணம் கட்டுவதும், வேலைக்காரி வராமல் திண்டாடுவதும் நிரந்தரமான பிரச்னைகள் இல்லையே!

**உ**ப்புப் பெறாத இந்த விஷயங்கள் என்னை பாதித்ததாலா பவித்ராவிடம் அப்படி எரிந்து விழுந்தேன்? கடைசியில் நான் வளர்ந்த நிலையிலேயே என் பெண்ணையும் வளர்த்து, வீணையைத் தொடப் பிடிக்கலை என்று கத்த வைத்து, இசையை மறக்கச் செய்து நாளைக்கு அவளும் தன் மகளை...

கடவுளே! இந்தச் செய்கைகள் முடிவில்லாத வட்டமாக அமைந்து, கடைசியில் இதுதான் பரம்பரைச் சொத்தாக ஆகி விடப் போகிறதா?

சாரதா உடம்பு உதறிப் போட எழுந்து நின்றாள்.

குழாய்த் தண்ணீரில் கையைக் கழுவிக் கொண்டு வேகமாகப் பவித்ராவின் அறைக்குள் நுழைந்தாள்.

"பவி... என்னம்மா பண்றே?"

முகச் சுளிப்பு மாறாமல் திரும்பிப் பார்த்த பவித்ரா, கையிலிருந்த புத்தகத்துக்குள் மறுபடி தலையைத் திணித்துக் கொள்ள,

கிட்டத்தில் சென்று அவள் தலையைச் செல்லமாக அசைத்தாள்.

"ரொம்ப கோபமாக்கும்! எனக்கு லஸ்ல வேலை இருக்கு... கூட வருவியா?"

"ப்ச்... நான் வரலை, நீ அஸ்வினை அழைச்சுண்டு போ!"

பெண்ணின் கோபம் சாரதாவைப் புன்னகை புரிய வைத்தது.

"நல்ல யோசனை! அப்ப, இளையராஜாவோட 'ஹவ் டு நேம் இட்?' காஸெட்டை அவனுக்கே வாங்கிக் கொடுக்கட்டுமா? அவன் சண்டைக்காரன். அப்புறம் உன் கண்ணுலேயே காட்ட மாட்டான், சரியா?"

விடுவிக்கப்பட்ட ஸ்பிரிங் வளையத்தைப் போல் துள்ளிக் கொண்டு நிமிர்ந்த பவித்ராவின் முகத்தில் விரவிய கேள்விக்குறியை மீறி ஒரு சந்தோஷம் கண்களில் வெளிச்சம் போடுவதைத் தெளிவாக உணர முடிய "பத்து நிமிஷம் — ரெடியாகி வாசல்ல நிக்கணும்" என்று உற்சாகமாகக் கூறியபடி சாரதா திரும்பினாள்.

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 43

## மீண்டும் கொள்ளிடக் கரை!

கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள திருநாரையூர் என்னும் கிராமத்தில் நம்பியாண்டார் நம்பி என்னும் சைவப் பெரியாரின் மடாலயம் இருந்தது. அதன் வாசலில் அரண்மனைப் பல்லக்கு ஒன்றும் பல்லக்குத் தூக்கிகளும் காவல் வீரர்களும் நின்றனர். இவர்களைத் தவிர கிராமவாசிகள் சிறிது தூரத்தில் கூட்டம் கூடி நின்றார்கள். அந்தக் கூட்டத்துக்கு மத்தியில் இரண்டு பேருக்குள் ஏதோ கடுமையான விவாதம் நடந்தது போலவும், அதை அக்கூட்டத்தார் உற்சாகத்துடன் கவனித்துக் கொண்டு வந்ததாகவும் தோன்றியது.

ஜனக் கூட்டத்தைச் சற்று விலக்கிக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தோமானால், நமக்கு முன்னே பழக்கமான இருவர் தான் அங்கே நின்று சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிய வரும். அவர்களில் ஒருவன் திருமலை என்ற ஆழ்வார்க்கடியான் நம்பி. மற்றொருவர், நம் கதையின் ஆரம்பத்திலேயே அவனுடன் படகில் விவாதம் தொடுத்த வீர சைவர்; நம்பியாண்டார் நம்பியின் சைவ மடாலயத்தில் பிரதான காரியக்காரர்.

நம்பி ஆண்டாரைப் பார்ப்பதற்காக வந்திருந்த பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி அந்த மகானுடனே ஏதோ தனிமையில் பேச விரும்புகிறார் என்பதை அறிந்து கொண்டதும் மேற்கூறிய வீர சைவப் பெரியார் வெளியேறி வந்தார். ஆழ்வார்க்கடியானைப் பார்த்ததும் அவருக்கு இயற்கையாகவே ஆத்திரம் பொங்கி வந்தது. முன்னொரு தடவை அந்த வீர வைஷ்ணவ சிகாமணியிடம் விவாதத்தில் தோல்வியடைந்து விட்டோம் என்கிற எண்ணம் அந்த ஆத்திரத்தை மூட்டியது.

''அடே! நாமத்தைப் போட்டு ஊரை ஏமாற்றும் வேஷதாரி வைஷ்ணவனே! இங்கே எங்கு வந்தாய்? எங்கேயாவது பொங்கல் – புளியோதரை கிடைக்குமிடம் பார்த்துக் கொண்டு போவதுதானே?'' என்றார்.

''பொங்கல் புளியோதரை வேண்டிய மட்டும் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறேன். இங்கேயுள்ள சைவ மடத்தில் நீங்கள் எல்லாரும் சாம்பலைத் தின்று உடம்பு வீங்கிப் போய்க் கிடக்கிறீர்கள் என்று அறிந்து வந்தேன். பாவம்! நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் சிவபெருமான் சாப்பிட அன்னம் கிடைக்காத காரணத்தினா

அமரர் கல்கி

லேதான் விஷத்தை உண்டார்? அப்போது மட்டும் எங்கள் நாராயண மூர்த்தியின் சகோதரி பார்வதி கழுத்தைப் பிடிக்காமலிருந்திருந்தால் உங்கள் சிவனுடைய கதி யாதாகியிருக்கும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அடே வீர வைஷ்ணவனே! நிறுத்து உன் கதையை! உயர உயரப் பறக்காதே! உங்கள் பெருமாள் உயர உயரப் பறந்தும் எங்கள் சிவபெருமானுடைய முடியைக் காண முடியாமல் திரும்பி வந்தாரில்லையா?"

"அது என்ன ஐயா கதை? எங்கள் மகாவிஷ்ணு வாமனாவதாரம் எடுத்து வந்து பூமியை ஒரு அடியினாலும் வானத்தை இன்னொரு அடியினாலும் அளந்த போது, உங்கள் சிவனுடைய முடி அந்த அடிக்குக் கீழேதானே இருந்திருக்க வேண்டும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"உங்கள் மகாவிஷ்ணு பத்துத் தடவை பூலோகத்தில் பிறந்ததிலிருந்தே அவருடைய வண்டவாளம் வெளியாகவில்லையா? அதிலும், எப்படிப்பட்ட பிறவிகள்? மீனாகவும், ஆமையாகவும் பிறந்தாரே?" என்றார் வீர சைவர்.

"உமக்குத் தெரிந்தது அவ்வளவுதான்! பகவான் மீனாகப் பிறந்தது எதற்காக? கடலில் மூழ்கிப் போன நாலு வேதங்களையும் திருப்பிக் கொண்டு வருவதற்கல்லவோ? ஆகையினாலேதான் எங்கள் ஆழ்வாரும்,

**'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலை திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் தவமுடையேனாவேனே!'**

என்று பாடியிருக்கிறார்....!"

"அப்பனே! உங்கள் ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர்தான்! எங்கள் நாயன்மார்கள் அறுபத்து மூன்று பேர்! அதை ஞாபகம் வைத்துக் கொள்!"

"ஓகோ! இப்படி வேறே ஒரு பெருமையா? பஞ்ச பாண்டவர்கள் ஐந்து பேர்தான்; துரியோதனாதியர் நூறு பேர் என்று பெருமையடித்துக் கொள்வீர் போலிருக்கிறதே!"

"அதிகப் பிரசங்கி! எங்கள் நாயன்மார்களைத் துரியோதனன் கூட்டத்தோடு ஒப்பிடுகிறாயா? உங்கள் ஆழ்வார்களிலேதான் பேயாழ்வார், பூதத்தாழ்வார் எல்லாரும் உண்டு."

"உங்கள் சிவபெருமானுடைய கணங்களே பூதகணங்கள்தானே? அதை மறந்து விட்டீராங்காணும்?...."



ப்படி வீர வைஷ்ணவரும் வீர சைவரும் வாதப் போர் நடத்திக்கொண்டிருந்த போது இருதரப்பிலும் சிரத்தையுள்ளவர்கள் இடையிடையே ஆரவாரித்து உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தார்கள். இச்சமயத்தில் மடாலயத்துக்குள்ளிருந்து சிவஞான கண்டராதித்தரின் திருத் தேவியான செம்பியன் மாதேவியும் அவரை வழி அனுப்புவதற்காக நம்பியாண்டார் நம்பியும் வெளியே வருவதைக் கண்டு, அக்கூட்டத்தில் நிச்சப்தம் நிலவியது.

மழவரையன் மகளார் நம்பியாண்டாரிடம் விடைபெற்றுக் கொண்டு வந்து ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "திருமலை! இங்கே கூட உன் சண்டையை ஆரம்பித்து விட்டாயா?" என்றார்.

"இல்லை, தேவி! நாங்கள் மற்போர் நடத்தவில்லை; சொற்போர்தான் நடத்தினோம். இந்த வீர சைவ சிகாமணிதான் முதலிலே போரை ஆரம்பித்தார்! எங்கள் சொற்போர் இங்கே கூடியிருப்பவர்களுக்கெல்லாம் மிக்க உற்சாகத்தை அளித்தது. அதனாலேதான் மடாலயத்துக்குள்ளே பிரவேசியாமலிருந்தார்கள்" என்றான் திருமலை.

"அப்பனே! தெய்வங்களுக்குள்ளே உயர்வு, தாழ்வு சொல்லி வேடிக்கையாகக் கூட விவாதம் செய்யக் கூடாது. அதனால், சாதாரண ஜனங்களின் உள்ளம் குழப்பத்துக்கு உள்ளாகும்! என் மாமனாராகிய பராந்தக தேவர் தில்லைச் சிற்றம்பலத்துக்குப் பொற் கூரை வேய்ந்தார். அம்மாதிரியே வீர நாராயணபுரத்திலுள்ள அனந்தீசுவரர் கோயிலுக்கும் திருப்பணி செய்து மான்யம் அளித்தார். அவர் காட்டிய வழியிலேயே நாம் அனைவரும் நடக்க வேண்டும்!" என்று கூறினார் செம்பியன் மாதேவி.

பின்னர், தேவியார் சிவிகையில் ஏறிக் கொள்ளவும், சிவிகை மேற்கு நோக்கிச் சென்றது. காவற்காரர்கள் முன்னும் பின்னும் தொடர்ந்தனர். ஆழ்வார்க்கடியான் செம்பியன்மாதேவியின் சிவிகைக்குச் சமீபமாக நடந்து சென்றான்.



றிது தூரம் சிவிகை போன பிறகு ஆழ்வார்க்கடியான் பெரிய பிராட்டியைப் பார்த்து, "தேவி! நம்பியாண்டாரை நம்பி வந்த காரியம் என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

"என் மனம் கலக்கம் நீங்கித் தெளிவு

அடைந்து விட்டது. திருமலை! மதுராந்தகன் சிங்காதனம் ஏறுவதை வேறு வழியில் தடுக்க முடியா விட்டால், உலகம் அறிய உண்மையைச் சொல்லி விடுவதே முறை என்று நம்பியாண்டார் சொல்லி விட்டார். நானும் அதை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டு உறுதி அடைந்து விட்டேன்!'' என்றார் செம்பியன்மாதேவி.

''நம்பியாண்டார் அவ்விதம் கூறுவார் என்றுதான் முதன் மந்திரியும் எதிர்பார்த் தார். ஆயினும் தாங்கள் இந்தப் பிரயாணம் வந்தது மிக நல்லதாய்ப் போயிற்று. தாயே! தாங்கள் இந்த விஷயமாக உடனே முடிவு செய்வதற்கு இன்னும் அதிகமான அவசியம் நேர்ந்திருக்கிறது. கடம்பூரிலிருந்து மிகப் பயங்கரமான செய்தி வந்திருக்கிறது. அது இன்னும் இந்த ஊரில் உள்ளவர்களுக்குத் தெரியாது. தெரிந்தால் இங்கு ஒருவரும் இருந்திருக்க மாட்டார்கள். எல்லாரும் இளவரசரின் இறுதி ஊர்வலத்தைப் பார்ப் பதற்குப் போயிருப்பார்கள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''திருமலை! இது என்ன சொல்லுகிறாய்? என்ன பயங்கரமான வார்த்தை! எந்த இளவரசர்? என்ன இறுதி ஊர்வலம்!'' என்று தேவி கேட்டார்.

''மன்னிக்க வேண்டும், தாயே! சோழ குலத்தில் இதுவரை இம்மாதிரி துர்ச் சம்பவம் நடந்ததில்லை. கடம்பூர் அரண் மனையில் ஆதித்த கரிகாலர் காலமானார். துர்மரணம் என்று சொல்லுகிறார்கள். யாரால் நேர்ந்தது, எப்படி நேர்ந்தது என்று மட்டும் தெரியவில்லை. பலர் பலவாறு சொல்லுகிறார்கள். ஆதித்த கரிகாலர் அகால மரணமடைந்த பிறகு கடம்பூர் அரண்மனை முழுவதும் தீப்பட்டு எரிந்து விட்டதாம். இளவரசரின் சடலத்தைத் தஞ்சைக்கு ஊர்வலமாக எடுத்து வருகிறார் களாம். திருக்கோவலூர் மலையமான் கடம்பூர் சம்புவரையரையும் அவருடைய குடும்பத்தையும் சிறைப்படுத்தி அழைத்து வருகிறாராம். ஊர்வலத்தில் ஒரு லட்சம் ஜனங்களுக்கு மேல் முன்னும் பின்னும் வருகிறார்களாம்! அவர்கள் கொள்ளிடக் கரைக்கு வருவதற்குள் நாம் அந்த நதியைக் கடந்து விட வேண்டும்!''

''திருமலை! நீ சொல்லுவது உண்மை யிலேயே பயங்கரமான செய்திதான்! வானத்தில் தூமகேது தோன்றியதன் காரணமாக ஜனங்கள் எதிர்பார்த்த விபரீ தம் நேர்ந்து விட்டது! ஆகா! அந்த அஸகாய சூரனின் கதி இப்படியா முடிய வேண்டும்? ஐயோ! சுந்தர சோழருக்கு இது தெரியும் போது என்ன பாடுபடுவார்? நோய்ப்பட்டிருக்கும் சக்கரவர்த்திக்கும் இந்தச் செய்தியினால் ஏதாவது நேராம லிருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருக்கிறது. கருணைக் கடலான சிவபெருமான்தான் சோழ குலத்தைக் காப் பாற்ற வேண்டும்!'' என்றார் மழவரையர் மகளார்.

''தாயே! சோழ குலத்துக்கு நேர்ந்திருக் கும் ஆபத்து ஒருபுறமிருக்கட்டும். இந்தத் துர் நிகழ்ச்சியினால் சோழ சாம்ராஜ்யமே சின்னாபின்னமாகி விடலாம் என்று எனக் குப் பயம் உண்டாகிறது.''

''அது ஏன் அந்த எண்ணம் உனக்கு உண் டாயிற்று, திருமலை?''

''சோழ நாட்டுத் தலைவர்கள் — சிற்றர சர்களுக்குள்ளே பெரும் சண்டை மூள லாம். இவ்வாறு சோழ நாட்டில் உள் சண்டையினால் இரத்த வெள்ளம் ஓடிக் கொண்டிருக்கும் போது வெளிநாட்டுப் பகைவர்கள் தைரியம் கொண்டு படை யெடுக்கத் தொடங்கி விடுவார்கள்! அதன் விளைவுகளைப் பற்றிச் சொல்ல வேண் டுமா, தாயே!''

''திருமலை! சிற்றரசர்கள் — தலைவர் களுக்குள்ளே ஏன் சண்டை மூளும் என்று சொல்லுகிறாய்?''

''தங்களுக்குத் தெரிந்த காரணந்தான். தாயே! சிலர் தங்கள் திருக்குமாரரான மதுராந்தகர் அடுத்தபடி பட்டத்துக்கு வர வேண்டும் என்பார்கள். மற்றும் சிலர் அருள்மொழிவர்மர்தான் சிம்மாசனம் ஏற வேண்டும் என்பார்கள். ஏற்கெனவே, கொடும்பாளூர் வேளாரின் படைகள் தஞ்சைக் கோட்டையைச் சுற்றி முற்றுகை இட்டிருக்கின்றன. இளவரசரின் சடலத்து டன் மலையமான் தஞ்சையை நோக்கிப் போகிறார். பழுவேட்டரையரைச் சேர்ந்த சிற்றரசர்கள் சைன்யம் திரட்டிக் கொண் டிருக்கிறார்கள். ஆகையால், தஞ்சையிலும் தஞ்சையைச் சுற்றிலும் சோழ நாட்டு வீரர் கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு இரத்த வெள்ளம் பெருக்கப் போகிறார் கள். காவேரி முதலிய ஐந்து ஆறுகளிலும் தண்ணீர் வெள்ளத்துக்குப் பதிலாக இரத்த வெள்ளம் ஓடப் போகிறது! மகா அறிவாளி யான முதன் மந்திரி அநிருத்தரே கலக்கம் அடைந்திருக்கிறார். விஜயாலயரும் ஆதித்த ரும் பராந்தகரும் தங்கள் திருக்கணவரான கண்டராதித்தரும் நிலைநாட்டி அரசு புரிந்த சோழப் பேரரசு நம் நாளில் அழிந்து போய் விடலாம் என்றே பயப்படுகிறார். இதைத் தடுப்பதற்கு அநிருத்தருக்கே வழி ஒன்றும் தோன்றவில்லை!'' என்றான் ஆழ்வார்க்கடி யான்.

''திருமலை! இறைவன் அருளால் இந்த மாபெரும் சாம்ராஜ்யத்துக்கு அத்தகைய விபத்து நேராமல் நான் தடுப்பேன். அதற்கு வழியை நான் அறிவேன். அந்த வழியைக்



கடைப்பிடிக்கலாமா என்று என் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு போகத்தான் நம்பியாண்டாரிடம் வந்தேன். மதுராந்தகனுக்கும் அருள்மொழிவர்மனுக்கும் சிங்காதனப் போட்டி ஏற்பட்டால்தானே உள்நாட்டுச் சண்டை மூளும் என்று சொல்கிறாய்?''

''ஆம், தாயே! அத்தகைய சண்டை மூளாமல் எப்படித் தடுக்க முடியும்? ஆதித்த கரிகாலர் பிராயத்தில் சிறிது மூத்தவர் என்ற காரணமாவது இதுவரையில் சொல்லக் கூடியதாயிருந்தது! இப்போது அவரும் போய் விட்டார். தங்கள் திருப்புதல்வரைக் காட்டிலும் அருள்மொழிவர்மர் இளையவர். ஆனால் மலையமானும் வேளாரும் சோழ நாட்டு மக்களும் இனி அருள்மொழிவர்மருக்கே பட்டம் என்று வற்புறுத்தப் போகிறார்கள். பழுவேட்டரையர்கள் அதை ஒத்துக் கொள்ளப் போவதில்லை...''

''திருமலை! யார் ஒத்துக் கொண்டாலும் சரி, ஒத்துக் கொள்ளா விட்டாலும் சரி, மதுராந்தகன் சிங்காதனம் ஏற மாட்டான். அதை நான் பார்த்துக் கொள்வேன். மகா புருஷராகிய என்னுடைய பதியின் விருப்பத்தை நான் நிறைவேற்றுவேன். மதுராந்தகனுக்குப் பட்டம் இல்லையென்று முடிவானால், உள்நாட்டுச் சண்டையும் இல்லைதானே?''

''ஆம்; அன்னையே! சோழ சாம்ராஜ்யம் சர்வநாசம் அடையாமல் இச்சமயம் தாங்கள் காப்பாற்றினால்தான் உண்டு: வேறு வழியே கிடையாது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''என்னால் ஆவது ஒன்றுமில்லை; மாதொரு பாகனாகிய மகேசுவரன் எனக்கு அத்தகைய சக்தியை அருள வேண்டும்'' என்றார் பெரிய பிராட்டியார்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாகச் சென்றார்கள். கொள்ளிடத்தின் ஓடத்துறை சற்றுத் தூரத்தில் தெரிந்தது.

''திருமலை! சற்று முன் ஒரு பயங்கரமான செய்தியைக் கூறினாய். ஆதித்த கரிகாலன் உயிர் இழந்தான் என்றாய். மூன்று உலகையும் ஆளவேண்டிய அந்த வீராதி வீரன் இறந்ததே விபரீதமான செய்திதான். இளவரசன் துர் மரணம் அடைந்ததாகக் கூறினாயே? அது எப்படி? தன் உயிரைத் தானே போக்கிக் கொண்டானா? அல்லது யாராவது அவனைக் கொன்று விட்டதாகச் சொல்கிறார்களா?'' என்று பெரிய பிராட்டி வினவினார்.

''தேவி! அதைப் பற்றிப் பலவிதப் பேச்சுகள் பரவி வருகின்றன. சம்புவரையர் வீட்டில் இது நடந்தபடியால் அவர் மீது சந்தேகப்பட்டு அவரையும் அவர் குடும்பத்தார் அத்தனை பேரையும் மலையமான் சிறைப்படுத்திக் கொண்டு வருகிறார். சம்புவரையர் மகன் கந்தமாறன் மட்டும் தப்பிச் சென்று விட்டானாம்....''

''சம்புவரையரால் இது நேர்ந்திருக்கும் என்று உண்மையில் எனக்கு நம்பிக்கைப்பட வில்லை. எவ்வளவுதான் விரோதமிருந்தாலும், அவருடைய இல்லத்துக்கு விருந்தாளியாக வந்திருந்த சக்கரவர்த்தித் திருமகனைக் கொல்லுவதற்கு யாருக்குத்தான் மனம் வரும்? சம்புவரையர் அப்படிச் செய்திருக்க முடியாது. அவர் இதைப் பற்றி என்ன சொல்லுகிறாராம்? இளவரசர் கரிகாலரின் மரணம் எப்படி நேர்ந்திருக்கும் என்று சொல்லுகிறாராம்?''

''தேவி! பழையாறைக்கு முன்னொரு சமயம் வாணர் குலத்து வீர வாலிபன்




ஒருவன் வந்திருந்தானே, நினைவிருக்கிறதா? அவனைக் குந்தவை பிராட்டியார் ஈழ நாட்டுக்குக் கூட ஓலையுடன் அனுப்பி வைக்கவில்லையா?''

''ஆம், ஆம்; ஞாபகம் இருக்கிறது. அவனைப் பற்றி என்ன?''

''இளவரசரின் உயிரற்ற சடலத்துக்கு அருகில் அந்த வாலிபன்தான் இருந்தானாம். ஆகையால் அவனேதான் கொன்றிருக்க வேண்டும் என்று சம்புவரையர் சொல்கிறாராம்.....''

''திருமலை! அப்படி ஒருநாளும் நேர்ந்திராது. அந்தப் பிள்ளையைப் பார்த்த ஞாபகம் எனக்கு இருக்கிறது...''

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன், தாயே! ஆனால் சந்தர்ப்பங்களும் சாட்சியங்களும் வந்தியத் தேவனுக்கு எதிராயிருக்கின்றன!''

''ஐயோ! பாவம்! இளைய பிராட்டி அந்த வாலிபனிடம் ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தாள். இந்தச் செய்தி தெரிந்தால் அவள் துடி துடித்துப் போவாள்!''

''தாயே! தங்களிடம் அதைப் பற்றிக் கேட்டுக் கொள்ளலாம் என்று நினைத்தேன். தாங்கள் குடந்தைக்குச் சென்றதும் இளைய பிராட்டியைச் சந்தித்துத் தஞ்சைக்கு அழைத்துக் கொண்டு போவது நல்லது...''

''அதுதான் என் உத்தேசம். இளைய பிராட்டி, எனக்காக அங்கே காத்துக் கொண்டிருக்கிறாள்.....''

''மற்றவர்கள் மூலம் பராபரியாக இளைய பிராட்டிக்குச் செய்தி தெரிவதற்கு முன்னால் தாங்களே சொல்லி விடுவது தான் நல்லது.....''

''அப்படியானால் இப்போது நீ என்னுடன் வரப் போவதில்லையா, திருமலை?''

''தேவி! தாங்கள் அனுமதி கொடுத்தால் கொள்ளிடத்தின் தென்கரையில் தங்களிடம்

விடை பெற்றுக் கொள்ள விரும்புகிறேன்..."

"எங்கே போகப் போகிறாய்?"

"இளவரசர் கரிகாலரின் மரணத்தில் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது. அதைக் கண்டு பிடித்து வருவதற்காகப் போக விரும்புகிறேன்."

"எப்படிக் கண்டு பிடிப்பாய்?"

"தேவி! பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றித் தங்களுக்கு முன்னமே ஒரு முறை சொல்லியிருக்கிறேன். அச்சதிகாரர்களில் ஒருவனைக் கொள்ளிடத்தின் தென் கரையில் நாம் வரும்போது பார்த்தேன்..." என்றான் திருமலை.

"உடனே நீ ஏன் அவனைப் பின் தொடர்ந்து செல்லவில்லை?"

"கொள்ளிடத்தின் வடகரைக்கு வந்த பிறகுதான் கரிகாலர் மரணத்தைப் பற்றிச் செய்தி தெரிந்தது. அரசி! எனக்கு விடை கொடுங்கள்! சதிகாரர்கள் சாதாரணமாகக் கூடிப் பேசுகிற இடம் எனக்குத் தெரியும்......"

"சரி, போய் வா! இளைய பிராட்டி குந்தவையிடம் என்ன சொல்லட்டும்? அவளை நினைத்தால் எனக்குப் பெருங்கவலையாயிருக்கிறது."

"வந்தியத் தேவன் மீது குற்றம் சாட்டப்பட்டால் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று சொல்லுங்கள். உண்மைக் குற்றவாளியை நான் எப்படியும் கண்டு பிடித்துக் கொண்டு வருவேன் என்று சொல்லுங்கள்!"

"இறைவன் அருளினால் நீ போகும் காரியம் வெற்றி அடையட்டும்!" என்றார் சிவபக்தியில் சிறந்த பெண்மணியான செம்பியன் மாதேவி.

இதற்குள் கொள்ளிடக் கரை வந்துவிட்டது. பெரிய பிராட்டி செம்பியன் மாதேவியும் பரிவாரங்களும் ஏறிச் செல்வதற்காகப் படகுகள் காத்திருந்தன.

ஆழ்வார்க்கடியான் வேறொரு சிறிய படகு பிடித்துக் கொண்டு அவர்களுக்கு முன்னால் விரைந்து படகைச் செலுத்தச் சொல்லி, அங்கிருந்து சென்றான்.

## அத்தியாயம் 44

## மலைக் குகையில்!

கொள்ளிடத்தின் தென் கரையை அடைந்ததும் ஆழ்வார்க்கடியான் மேற்றிசையை நோக்கிப் போனான். கொள்ளிடத்தின் உடைப்பினால் எங்கும் வெள்ளக் காடாக இருந்ததைப் பார்த்தான். ஆயினும் கொள்ளிடத்தில் தண்ணீர் மட்டம் குறைந்து வந்ததைப் போல் உடைப்பினால் தண்ணீர் பரவியிருந்த இடங்களிலும் வேகமாகத் தண்ணீர் வடிந்து கொண்டு வந்தது. கடைசியாகத் திருப்புறம்பயத்தை அடைந்தான். அந்த ஊர் மட்டும் அவ்வளவு வெள்ளத்தினாலும் பாதிக்கப்படாமல் இருந்ததைப் பார்த்து வியந்தான். ஆதி காலத்தில் உலகமே பிரளயத்தில் ஆழ்ந்த போது திருப்புறம்பயம் மட்டும் தண்ணீரில் முழுகாமலிருந்தது என்னும் வரலாறு இதனாலேதான் ஏற்பட்டது போலும் என்று எண்ணிக் கொண்டு பள்ளிப்படைக் காட்டை நெருங்கினான். அங்கே புயலினால் பல மரங்கள் சாய்ந்து விழுந்திருந்த போதிலும் அவன் ஒளிந்து பார்ப்பதற்கு வேண்டிய அடர்த்தியில்லாமற் போகவில்லை. அவ்விதம் பார்த்தபோது, பள்ளிப்படைக் கோவில் வாசலில் ஆண்கள் மூவரும் ஒரு ஸ்திரீயும் நின்று பேசுவது தெரிந்தது. நன்றாய் உற்றுப் பார்த்த போது, எல்லாரும் அவனுக்கு முன்னாலே தெரிந்தவர்கள் என்று அறிந்தான். அதே பள்ளிப்படைக் காட்டில் முதன் முதலில் சதியாலோசனைக்காகக் கூடியவர்களில் இந்த மூன்று ஆண் பிள்ளைகளும் இருந்தார்கள். ஒருவன் சோமன் சாம்பவன், இன்னொருவன் கிரமவித்தன், மூன்றாவது ஆள் இடும்பன்காரி, ஸ்திரீ, படகோட்டி முருகய்யனுடைய மனைவி. அவர்களில் இடும்பன்காரி மற்றவர்களுக்கு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். அச்செய்தி அவர்களுக்கு உற்சாகத்தை அளித்ததாகத் தெரிந்தது. "சரி! அப்படியானால் நாமும் பச்சை மலை அடிவாரத்துக்கு உடனே புறப்படலாம். போய்ச் சேர இரண்டு நாட்கள் பிடிக்கும்" என்று சோமன் சாம்பவன் கூறியது ஆழ்வார்க்கடியான் காதில் விழுந்தது.

அவர்களுக்கு முன்னால் தான் அங்கிருந்து புறப்பட்டு விடலாம் என்று எண்ணி ஆழ்வார்க்கடியான் திரும்பினான். அவனுடைய மார்புக்கு நேரே சிறிய கத்தியைக் கண்டு திடுக்கிட்டான். அதைப் பிடித்திருந்த கை பூங்குழலியின் கை என்று தெரிந்ததும்

திகைப்பு நீங்கியது. இருவரும் ஒருவரையொருவர் தெரிந்து கொண்டதும் புன்னகையினால் தங்களின் வியப்பைத் தெரிவித்துக் கொண்டார்கள். சமிக்ஞையின் மூலமாக வாய் பேசாமல் சிறிது நேரம் காத்திருக்க வேண்டிய அவசியத்தையும் உணர்த்திக் கொண்டார்கள்.

சதிகாரர்கள் அங்கிருந்து போய் விட்டார்கள் என்று தெரிந்த பிறகு ஆழ்வார்க்கடியான், "பூங்குழலி! தஞ்சாவூரிலிருந்து நீ எப்படி இங்கே வந்தாய்? எதற்காக வந்தாய்?" என்று கேட்டான்.

"பழி வாங்குவதற்காக வந்தேன்" என்றாள் பூங்குழலி.

"என்ன பழி? எதற்காக?"

"இவர்களிலே ஒருவன் என் அத்தையைக் கொன்றுவிட்டு ஓடிவந்த பாதகன். அப்பாதகனை விடாமல் பின் தொடர்ந்து இவ்விடத்தில் வந்து பிடித்தேன். இங்கே இன்னும் மூன்று பேர் அவனுக்கு முன்னால் வந்திருந்தார்கள். அதிலும் என் அண்ணன் மனைவியை அவர்களுடன் பார்த்ததும் திகைத்துப் போனேன்! அதற்குள் நீ ஒருவன் வந்து குறுக்கிட்டாய்! இப்போது என்ன செய்யலாம்? நீ எனக்கு உதவி செய்வதாயிருந்தால் இவர்களை விடாமல் தொடர்ந்து போய் என் அத்தையைக் கொன்றவனைக் கொன்றுவிட்டு வருவேன்!" என்றாள்.

"ஐயோ! பாவம்! உன் அத்தை என்றால், அந்த ஊமை ராணி மந்தாகினிதானே? அவளை எதற்காக இவர்களில் ஒருவன் கொன்றான்?" என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

"அத்தையைக் கொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொல்லவில்லை, சக்கரவர்த்தியைக் கொல்ல நினைத்து அவர் மேல் எறிந்த வேலை என் அத்தை தாங்கிக் கொண்டாள்!" என்றாள்.

"ஓகோ! அப்படியா? ஊமை ராணி தன் உயிரைக் கொடுத்துச் சக்கரவர்த்தியைக் காப்பாற்றினாளா? இதெல்லாம் எப்படி நடந்தது? சற்று விவரமாகச் சொல், கேட்கலாம்!"

"விவராமாகச் சொல்லுவதற்கு இது தானா சமயம்? அவர்கள் தப்பித்துக் கொண்டுபோய் விடுவார்களே?"

"பூங்குழலி! அவர்கள் போகுமிடம் எனக்குத் தெரியும். எதற்காக யாரைச் சந்திப்பதற்காகப் போகிறார்கள் என்றும் ஊகித்துக் கொண்டேன், வழியிலே அவர்களைத் தடை செய்யாமலிருப்பதே நல்லது. அவர்கள் போகுமிடத்துக்கு நாமும் போகலாம். அங்கே நான் தெரிந்து கொள்ள விரும்புவதைத் தெரிந்து கொண்ட பிறகு நீ உன் பழியை முடித்துக் கொள்ளலாம்" என்றான்



ஆழ்வார்க்கடியான்.

"அப்படியானால் புறப்படு! போகும் போதே தஞ்சாவூரில் நடந்ததையெல்லாம் உனக்கு விவரமாகச் சொல்கிறேன்!" என்றாள் பூங்குழலி.




ருவரும் கொள்ளிடத்தைப் படகின் மூலமாகக் கடந்து அக்கரை அடைந்தார்கள். வடமேற்குத் திசையை நோக்கிப் பிரயாணம்செய்தார்கள். மூன்று தினங்கள் இரவும் பகலும் பிரயாணம் செய்த பின்னர், பச்சை மலையின் அடிவாரத்தை அடைந்தார்கள். அந்த அடிவாரத்தில் அடர்ந்த காடு மண்டிக் கிடந்த படியால் இவர்கள் தேடிச் சென்றவர்கள் எங்கே இருக்கக்கூடும் என்பதை இலேசில் கண்டு பிடிக்க முடியவில்லை. இவ்வளவு பிரயாசையுடன் பிரயாணம் செய்து வந்தது வீணாகி விடுமோ என்று மனச் சோர்வு அடைந்தார்கள்.

திடீர் என்று ஆந்தையின் குரல் ஒன்று கேட்டது. பதிலுக்கு மற்றொரு குரல் அதே மாதிரி கேட்டது. ஆழ்வார்க்கடியானுடைய முகம் மலர்ந்தது. பூங்குழலிக்குச் சமிக்ஞை மூலமாகப் பேசாமல் தன்னுடன் வரும்படி தெரிவித்தான். ஆந்தைகளின் குரல் கேட்ட இடத்தில் இடைவெளி தென்பட்டது. அங்கே ஏழெட்டுப் பேர் இருந்தார்கள். சிலர் நெருப்பு மூட்டிச் சமையல் செய்து கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். முன்னமே அங்கு இருந்தவர்களும் புதிதாக வந்து சேர்ந்தவர்களும் ஒருவருக்கொருவர் ஏதோ வியப்பான செய்தி சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்று தெரிந்தது.

முன்னமே அங்கிருந்தவர்களில் ரவிதாஸனும் ஒருவன். அவன் அப்போது புதிதாக அங்கே வந்து சேர்ந்தவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த மலைக் குகையொன்றைச் சுட்டிக் காட்டி ஏதோ தெரிவித்துக் கொண்டிருந்தான். இதை ஆழ்வார்க்கடியான் கவனித்துக் கொண்டான். மெல்லிய குரலில், "பூங்குழலி! நான் தேடி வந்தவர்கள் அந்த குகைக்குள்ளேதான் இருக்க வேண்டும். நான் மெள்ளக் குகைக்குள்ளே



மனசுக்கு அமைதி உண்டு பண்ணத்தான் சங்கீதம். அதில் விவகாரம் எதற்கு? விவகாரம் என்ற வார்த்தையின் பொருள் அமைதியை அழிப்பதாகும். முறையாகச் சங்கீதம் பயின்றவர், ஞானமும் சுக சாரீரமும் உடையவர். நிறைந்த உள்ளத்தோடு பாட வேண்டும். கலை மீதும் கடவுள் மீதும் பக்தியுடன் பாடினால் கேட்பவர் உள்ளத்தில் உவகை உண்டாகும். அதை விட்டு நெருடான வழிகளில் போய்ப் பக்கவாத்தியக்காரர்களுடன் பலப் பரீட்சை பார்க்க ஏற்பட்ட போர்க்களம் அல்ல கச்சேரி மேடை. விவகாரம் செய்ய வேண்டுமானால் பொது ஜனங்கள் கூடக் கூடிய சபைகளை விட்டுவிட்டுத் தனி இடம் ஏற்படுத்திக் கொண்டு மேதைகள் மட்டும் கூடி அந்தக் காரியத்தை நடத்துவது மேல். கேட்பவர் மனசுக்கு ரம்மியமான சங்கீதத்தை அளிப்பதுதான் சங்கீத வித்வானின் முதல் கடமை.

— செம்மை.

ஆதாரம்: 'செம்மைச் செல்வம்'
தகவல்: எஸ். பானுமதி.

நுழைந்து பார்க்கிறேன். இவர்களில் யாராவது குகையை நெருங்கி வந்தால் நீ ஒரு குரல் கொடு!'' என்றான்.

''ஆந்தை கத்துவதுபோல் என்னால் கத்த முடியாது. குயில் கூவுவதுபோலக் கூவுகிறேன்!'' என்றாள் பூங்குழலி.



லைக்குகைக்குள்ளே காற்றும் வெளிச்சமும் நுழைவதற்காகச் சில பெரிய துவாரங்கள் செய்யப்பட்டிருந்தன. ஆகையால் உள்ளே நன்றாக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது.

அந்த வெளிச்சத்தில் ஆழ்வார்க்கடியான் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான். பெரிய பழுவேட்டரையர் காளாமுகச் சாமியார்களைப் போல் புலித்தோல் உடை தரித்திருந்தார். அவர் பக்கத்தில் மண்டை ஓட்டு மாலை ஒன்று கிடந்தது. அவர் உடம்பிலிருந்து இரத்தம் மிகச் சேதமாகியிருக்க வேண்டும் என்று அவர் முகம் வெளுத்துப் போயிருந்ததிலிருந்து ஊகிக்கும்படியிருந்தது. தரையிலே படுத்திருந்தவர் அப்போதுதான் சுய நினைவு பெற்று எழுந்து உட்கார முயன்றதாகத் தோன்றியது. ஏதோ பயங்கர சொப்பன உலகிலிருந்து அப்போதுதான் விழித்தெழுந்தவர்போல் காணப்பட்டார். அவருடைய கண்கள் திறுதிறுவென்று விழித்தன.

அவர் பக்கத்தில் நந்தினி இருந்தாள். அவள் ஆபரண அலங்காரங்கள் களையப் பெற்றுத் தலைவிரி கோலமாக இருந்தாள். ஆயினும் அவளுடைய வசீகர சௌந்தரியம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகப் பிரகாசித்தது. அன்பும் ஆதரவும் பரிதாபமும் பச்சாத்தாபமும் ததும்பிய குரலில், ''ஐயா! இந்தக் கஞ்சியை அருந்துங்கள்!'' என்று கூறிக் கொண்டே ஒரு மண் பாத்திரத்தை அவரிடம் நீட்டிக் கொண்டிருந்தாள்.

பழுவேட்டரையர் அவளைத் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் ஒருகண நேரம் எல்லையற்ற இன்பத்துக்கு அறி குறியான புன்னகை மலர்ந்தது.

''நந்தினி! என் பேரரசி! நீ தானா இப்போது பேசினாய்? உன்குரல்தானா இது? நாம் இப்போது எங்கே இருக்கிறோம்? மரணத்தின் வாசலுக்குச் சென்றிருந்த என்னை நீயா திரும்பக் கொண்டு வந்து சேர்த்தாய்? அன்று சாவித்திரி சத்தியவானுக்குச் செய்ததை இன்று நீ எனக்குச் செய்தாயா? எனக்கு நினைவு வந்த போது உன்னுடைய மலர்க் கையினால் என்னுடைய மார்பைத்தொட்டுப்பார்த்துக்கொண்டிருந்ததாகத் தோன்றியதே! அது உண்மையா? மூன்று ஆண்டு காலமாக என்னைத் தொடவும் மறுத்தவள் கடைசியாக மனமிரங்கி விட்டாயா? எங்கே? கொடு! கஞ்சியைக் கொடு! உன் கையினால் கஞ்சி கொடுத்தால் அதுவே எனக்குத் தேவாமிர்தமாகும்!'' என்றார்.

இவ்விதம் சொல்லிக் கொண்டே நந்தினியின் கையிலிருந்த மண்பாண்டத்தை வாங்கிக்கொண்டவர்திடீரென்று அவளை வெறித்துப் பார்க்கத் தொடங்கினார்! அடியோடு மாறிப் போன பயங்கரமான குரலில், ''அடி பாதகி! ராட்சஸி! நீதானா? என்னைத் தொடுவதற்கு உனக்குத் தைரியம் வந்ததா? என் நெஞ்சில் கத்தியால் குத்தப் பார்த்தாயா? அப்போது நான் விழித்துக் கொண்டேனா? இந்தப் பாத்திரத்தில் இருப்பது உண்மையில் கஞ்சிதானா? அல்லது என்னைக் கொல்லுவதற்கான நஞ்சா? உன் கையால் கொடுப்பது தேவாமிர்தமானாலும் எனக்கு அது விஷமல்லவோ?'' என்று கூறிவிட்டு அம்மண் பாண்டத்தை வீசி எறிந்தார். அது தடாலென்று குகைச் சுவரில் மோதிச் சுக்கு நூறாகிச் சிதறி விழுந்தது.

(தொடரும்)

# உங்கள் பணத்தை மேன்மேலும் பெருக்குவது எப்படி?
## பத்திரமாக, நம்பகமாக, பாதுகாப்பாக...



## விடைகாண உடன் வாரீர் பிடிவிடி பைனான்ஸ்

ஒரு டெபாசிட்தாரர் என்னும் முறையில், உங்கள் பணத்தைப் பாதுகாக்க வேண்டியது உங்கள் தலையாயப் பொறுப்பு. உங்கள் பணம் பத்திரமாகவும் பாதுகாப்பாகவும் இருக்கும் ஒரு நம்பகமான கம்பெனியில் அதை முதலீடு செய்ய வேண்டும்.

அதாவது பிடவிடி பைனான்ஸ் போன்ற கம்பெனி. டிவிஎஸ் குடும்பத்தினரால் தோற்றுவிக்கப்பட்ட கம்பெனி.

பிடவிடி பைனான்ஸ் 1983-ல் துவக்கப்பட்டது முதல், நாளுக்கு நாள் வலுவடைந்து வருகிறது. தொடக்கத்தில் ரூ. 5 லட்சமாக இருந்த அதன் பங்கு மூலதனம், 1989 மே 31-ந் தேதியன்று ரூ. 54 லட்சத்தை எட்டிவிட்டது. அதுமட்டுமா? இத்துறையிலே மிக உயர்ந்த வசூல் விகிதத்தைப் பெற்றுள்ளது இந்தக் கம்பெனி. டெபாசிட்தாரர்கள் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு இதைவிட அத்தாட்சி வேறென்ன வேண்டும்?

எனவே, முதலீடு செய்யுமுன், சரியான, விவேகமான முடிவு எடுங்கள். உங்கள் பணத்தை பிடவிடி பைனான்ஸில், உங்களுக்குப் பொருத்தமான சேமிப்புத் திட்டத்தில் டெபாசிட் செய்யுங்கள்.

## பிடவிடி பைனான்ஸ் — முதலீடு செய்ய முதலான தேர்வு



## பிடவிடி பைனான்ஸ் லிட்

பதிவு அலுவலகம் & டெபாசிட் பிரிவு: 42, ஒயிட்ஸ் சாலை, சென்னை-600 014.
தொ.பே: 865966, 862268, 861381
நிர்வாக அலுவலகம்: டிவிஎஸ் வளாகம், 180, அண்ணா சாலை, சென்னை-600 006.

கிளைகள்: தமிழ்நாடு: • 52, சிவஸ்வாமி சாலை, ராம் நகர், கோயம்புத்தூர்-641 009 • 211, தெற்கு வெளி வீதி, மதுரை-625 001 • பிளாட் நெ. 9, பவர் அபார்ட்மெண்ட்ஸ், அழகாபுரம் புதூர் ரோடு சேலம் -636 016. • 30, பைபாஸ் ரோடு, வேலூர்-632 004 • 72, நாகேஸ்வரன் வடக்கு வீதி, கும்பகோணம்-612 001 பாண்டிச்சேரி: • சஞ்சய் காந்தி நகர், பாண்டிச்சேரி-18 ஆந்திரா: • 10-1-14, காந்தி ரோடு, சித்தூர்-517 001 மகாராஷ்டிரா: • 45/47, பாங்க் ஆஃப் மகாராஷ்டிரா பில்டிங், 5-வது மாடி, பாம்பே சமாச்சார் மார்க், பம்பாய்-400 023 • H.A. லிட், காம்பவுண்ட், பம்பாய்-புனே ரோடு, பிம்ப்ரி, புனே-411 018

## டிவிஎஸ் குடும்பத்தினரால் தோற்றுவிக்கப்பட்டது

இந்த விளம்பரம் ஏற்கனவே ஆங்கிலம் மற்றும் தமிழ் நாளேடுகளில் அக்டோபர் 30, 1989ம் தேதி வெளியான ரிசர்வ் வங்கியின் விதிமுறைகளுக்குட்பட்ட விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

Moulis

# பெற்றவர்கள்

"நந்தீஸ் இன்னைக்கு உனக்கு முக்கியமான வேலை ஒண்ணு இருக்கு..."

அப்பாவின் முகத்தை அப்பொழுதுதான் ஏறிட்டுப் பார்த்தேன். உடலில் ஒருவிதமான படபடப்போடும், கண்களில் இனம் தெரியாத கலக்கத்தோடும் இருந்தார்.

"என்ன வேலை அப்பா... ஏன் ஒரு மாதிரியா இருக்கீங்க? உடம்புக்கு எதுவும் முடியலையா?"

"இல்ல நந்தீஸ். உடம்புக்கு ஏதும் இல்லை. மனசில இருக்கிற பாரம்தான் உடம்புத் தள்ளாட வைக்குது!" என்றவாறே வெளியில் கிடந்த கட்டிலை எடுத்து வந்து முன் கூடத்தில் போட்டு, என்னை அமரச் செய்து, அவரும் என் அருகிலேயே அமர்ந்து கொண்டு தொடர்ந்தார்.

"நந்தீஸ் இந்த இருபத்தி நாலு வயசுல முழுமையான ஆளா, சுயமா சிந்திக்கத் தெரிஞ்ச மனுஷனா வளர்ந்திருக்கே. சிக்கலான ஒரு விஷயத்தைச் சொன்னாலும் தாங்கிக்கக் கூடிய... அதைப் பற்றி முடிவெடுக்கக் கூடிய அறிவு உங்கிட்ட இருக்கு. அந்த நம்பிக்கையில் இத்தனை நாளா மறைச்சி வைச்சிருந்த ஓர் உண்மையைச் சொல்லப் போறேன். அது உனக்கு அதிர்ச்சியா இருக்கலாம்..."

நான் அமைதியாகத் தலையை குனிந்து கொண்டு கேட்டுக் கொண்டிருந்தேன். என் பார்வை எங்கோ இருந்தாலும் அவருடைய முகத்தில் ஏற்பட்ட கலவையான உணர்ச்சியை என்னால் அறிந்து கொள்ள முடிந்தது.

"நந்தீஸ்... உன் பேருக்கு முன்னால் ஏதோ எழுத்தைச் சேர்த்து எழுதறயே அது எதுக்கப்பா?"

இந்த இன்ஷியல் பிரச்னை இப்பொழுது எதற்காக வந்தது!? 'ஏதோ தெரியாதவரைப் போல் கேட்கிறாரே!' என்றிருந்தது எனக்கு. இருந்தாலும் சீரியஸாகக் கேட்டதால் சொன்னேன்.

"உன்னோட பேருக்கு முன்னால் போடற எழுத்துக்கு நியாயமான உரிமையில்லாதவன் நான். அதுக்கு உரிமையுள்ளவன் இப்ப உன்னைப் பார்க்கணும்னு துடிக்கறான்."

அப்பா இதைச் சொல்லும் போது நிதானமாக அதே நேரத்தில் அழுத்தமாகச் சொன்னார். அவர் உதிர்த்த வார்த்தைகளின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள எனக்குச் சில நிமிடங்கள் பிடித்தன. புரிந்த போது அழுகை, கோபம் எல்லாம் கலவையாக வந்தன. ஏன்... எதற்காகத் திடீரென்று 'நான் உன் அப்பா இல்லை... உன்னைப் பெற்றவன் நான் இல்லை' என்று சொல்ல வேண்டும்?

"அப்பா... அம்மா..." என்று அழைத்துக் கொண்டு இவர்கள் பொழியும் பாச மழையில் குளித்துக் கொண்டு இருக்கும் எனக்கு இது பேரிடி. 'பேரிடி' என்ற வார்த்தையை முன்பு அடிக்கடி படித்திருக்கிறேன்; கேட்டிருக்கிறேன். அதன் உண்மையான அர்த்தத்தை இப்பொழுதுதான் உணர்கிறேன்.

"நந்தீஸ் இருபத்தி மூணு வருஷத்துக்கு முன்னே உன்னைப் பெத்தவங்க ஒன்பது மாச குழந்தையா என் கையில் உன்னைக் குடுத்தப்ப அவங்க ரொம்ப வறுமையில்



இருந்தாங்க. நாங்களும் பிள்ளைக்காகத் தவம் இருந்துக்கிட்டு இருந்தோம். அப்போ எங்ககிட்டே வசதி இருந்தது.. அவங்ககிட்டே வறுமை இருந்தது. அதனால் உன்னைக் கைமாத்திக்கிட்டோம். உன்னை நாங்க தத்துப் பிள்ளையா வளர்க்கல... எங்களுடைய ரத்தமாகவே எங்க உயிராகவே வளர்த்தோம். இதைப் பத்தின விஷயம் உனக்குத் தெரியவே கூடாதுன்னு தான் இரண்டு குடும்பங்களும் சேர்ந்து முடிவெடுத்திருந்தோம். ஆனா இப்ப உன்னைப் பெத்தவன் உன்னைப் பார்க்கணும்னு துடியாத் துடிச்சிட்டு இருக்கானாம். தபால்ல எழுதி இருக்கிறதைப் பார்க்கிறப்போ ஏறக்குறைய படுக்கையில் இருப்பான் போலிருக்கு!''

''அப்பா!''

''என்ன நந்தீஸ்?''

''இதை என்கிட்டே நீங்க சொல்லாமலேயே இருந்திருக்கலாம்.''

''தப்பு நந்தீஸ். ரொம்பத் தப்பு. யார் வழியாவோ உனக்குத் தெரிவதை விட... நானே சொல்லிடணும்.. இன்னைக்குச் சாயந்திரம் உன்னை அங்கே அழைச்சிட்டுப் போகப் போறேன். அவங்கள்லாம் 'யாரோ எவரோ'ன்னு அறிமுகமாகிறதை விட இந்த வகையில உறவானவங்கன்னு நீ தெரிஞ்சிக்கிட்டு அவங்ககிட்டே பழகணும். அதுதான் முறை.''



இரண்டு மணி நேர பஸ் பயணத்தில் என் மனம் இருபது மணி நேரத்திற்கான சிந்தனையைச் செய்தது.

அப்பா இதை என்னிடம் சொல்லியதற்காக அம்மா அவரிடம் வெகுவாகக் கோபித்துக் கொண்டாள். 'ஊருக்குப் போகவே வேண்டாம்..வேண்டுமானால் அவர்கள் வந்து பார்த்து விட்டுப் போகட்டும்' என்று அடம்பிடித்தாள். அப்பாதான் ஏதேதோ நியாய வாதங்கள் எடுத்துச் சொல்லி அம்மாவை மசிய வைத்தார்.

இளம்பிள்ளையில் அவர்கள் வீட்டை அடைந்த போது வாசற்படியில் குழந்தையுடன் அமர்ந்திருந்த ஒரு பெண் உள்ளே பார்த்து,

''அம்மா பெரியப்பா வர்றாங்க!'' என்றவாறே அப்பாவைப் பார்த்து, ''வாங்க பெரியப்பா!'' என்றாள்.

என்னையோ காலிலிருந்து தலை வரை ஆர்வத்தோடு பார்த்து, ''வாங்க தம்பி!'' என்று ஒற்றை வார்த்தையில் நிறுத்திக் கொண்டாள். ஆச்சர்யம் கலந்த மகிழ்ச்சி அவள் முகத்தில் அப்பட்டமாய்த் தெரிந்தது.

அப்பாவைப் புதிதாகப் பார்க்கிறோம் என்ற ஒரு சலனமும் அந்தப் பெண்ணிடம் இல்லை. அப்படியானால் அப்பா அடிக்கடி இங்கே வருவார் போலிருக்கிறது! வீட்டிற்குள் நுழைந்தோம். நடுத்தரக் குடும்பத்திற்கும் கொஞ்சம் கீழான நிலையில் இருந்தார்கள்.

கூடத்தின் ஓரத்தில் ஒரு கயிற்றுக் கட்டில் போடப்பட்டிருந்தது. அதில் கசங்கிப் போன பேப்பராய் ஓர் உருவம்... அவர்தான் என்னைப் பெற்றவர் போலும். பக்கத்தில் ஓர் அம்மாள்... என்னைச் சுமந்தவள். நாங்கள் உள்ளே நுழைந்ததும் வரவேற்றாள்.

என்னைப் பெற்று, விற்று விட்டவர்கள் மீது எனக்குக் கோபம்தான். ஆனாலும் இவர்களைப் பார்த்தவுடன் என் உடலில் ஏன் ஒருவிதமான ரசாயன மாற்றம் நிகழ்கிறது? நெஞ்சுப் பகுதியிலிருந்து வயிற்றுப் பகுதிக்கு அமிலம் சுரப்பதைப் போல் இருக்கிறதே ஏன்? அவர்களுடைய சாயல் என்னை ஒத்திருக்கிறதா என்று என்னையும் அறியாமல் அவர்களை உற்று உற்றுப் பார்க்கிறேன்.

என்னைப் போலவே, அந்த அம்மாளும் ஆர்வமாக... மிக ஆர்வமாக நோக்கினாள். அவள் உருவாக்கிக் கொடுத்திருந்த சின்னஞ்சிறு உயிர், இன்று ஆறடி உருவமாக, முழுமை பெற்ற மனித வடிவாக வந்து நிற்பதைக் கண்டு பூரித்திருந்தாள்.

**சு. நாகராசன்**

கட்டிலில் படுத்திருந்த அந்த உருவத்தை மெள்ளத் தட்டி, ''என்னங்க... அவங்க வந்திருக்காங்க! கண்ணை முழிச்சுப் பாருங்க!'' என்றாள்.

அப்பா அந்தக் கட்டிலின் விளிம்பில் அமர்ந்து கொண்டு,

''வேணி நந்தீஸ்வரன்கிட்டே எல்லாத்தையும் சொல்லிட்டேன். அதனால் 'உன் மகன் வந்திருக்கான்'னு கூச்சப்படாமல் சொல்லி எழுப்பு'' என்றார்.

அந்த அம்மாள் அப்படியே சொல்லி எழுப்பினாள். அசதியாகக் கண் விழித்தவர் எங்களைக் கண்டதும் ஆச்சர்யத்தில் ஆழ்ந்து போனார். கொஞ்ச நேரம் என்னை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வை 'என் மகன்! என்னால் உருவாக்கப்பட்ட பிம்பம்!' என்பதைப் போல் இருந்தது.

தாழ்வாரத்தில் என்னை 'வாங்க தம்பி' என்று அழைத்த அந்தப் பெண், ஒரு நாற்காலி கொண்டு வந்து போட்டு என்னை அமரச் செய்தாள்.

''ஒரு மாசமா உங்களைப் பத்தியே அப்பா பேசிக்கிட்டு இருந்தாரு... பார்க்கணும்னு ரொம்ப அடம்புடிச்சாரு. அதுதான் கடிதாக போட்டேன்'' என்றாள்.

அவள் எனக்கு என்ன உறவு என்பதைப் போல் அப்பாவைப் பார்த்தேன்.

''நந்தீஸ் இவ பேரு சுமதி... உனக்கு அக்கா, எல்லாருக்கும் மூத்தவ. அடுத்தது, அதோ அந்த போட்டோவுல இருக்கிறது தான் உனக்கு அண்ணன். ஆறு வருஷங்களுக்கு முன்னே விபத்திலே செத்துட்டான். பேரு மணி.''

அப்பா காட்டிய அந்தத் திசையில் திரும்பிப் பார்த்தேன். மேலே பூப் போட்டு, பொட்டு வைத்திருந்த கண்ணாடி பிரேமுக்குள் சிரித்துக் கொண்டிருந்த அந்த உருவம் என்னை ஒத்திருந்தது.

''அப்புறம் நந்தீஸ்... சேகர், உமா... ஏம்மா சுமதி, எங்கே சேகரும், உமாவும்?''

''உமா சிநேகிதி வீட்டுக்குப் போயிருக்கா. சேகர் ஸ்கூலுக்குப் போயிருக்கான். வந்துடுவாங்க பெரியப்பா.''

''வரட்டும்... வரட்டும். என்ன சீனிவாசா வைச்ச கண்ணை எடுக்காம இன்னமும் மகனையே பார்த்துக்கிட்டு இருக்கே. ஏதாவது பேசேன்.''




அப்பா சூழ்நிலையைச் சகஜ நிலைக்குக் கொண்டு வர முயற்சி செய்தார். எனக்கும் அப்பொழுதுதான் இறுகி இருந்த மனம் மெள்ள இளகிவரலாயிற்று. வீட்டைச் சுற்றிலும் நோக்கினேன். சுவரில் மாட்டியிருந்த படங்களை ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டு வந்தேன். அட! என் சின்ன வயது போட்டோ ஒன்றும்... நான்கு வருடங்களுக்கு முன்பு அம்மா, அப்பா, நான் மூன்று பேரும் சேர்ந்து எடுத்துக் கொண்ட போட்டோ ஒன்றும் மாட்டியிருந்தது!

''கண்ணு நந்தீஸ்வரா...!'' என்னைப் பெற்றவர் அழைத்தார். திரும்பிப் பார்த்து 'உம்' என்று உம் கொட்டினேன். சடாரென்று 'அப்பா' என்று அழைக்க வாய் வரவில்லை. என்னை அழைத்தவர் எதுவும் பேசாமல் மீண்டும் மௌனமாக இருந்தார். அப்பாதான்,

''என்ன சீனிவாசா... ஏதோ சொல்லணும்னு நினைக்கிற போலிருக்கு. ஏன் சொல்ல முடியாம தவிக்கிறே?'' என்று பரிவோடு கேட்டார்.

திடீரென்று என்னைப் பெற்றவர் குலுங்கிக் குலுங்கி அழுதார். எனக்குப் பரிதாபமாக இருந்தது. பாசத்தின் வேகம் அவருக்கு அழுகையாக வந்து விட்டது போலும். அப்பா பதறிப் போய் விட்டார்.

''என்ன... என்ன சீனிவாசா? ஏன் அழுறே? நான்தான் வந்திருக்கேனில்ல... என்ன வேணும்னு மனசு திறந்து சொல்லு'' என்றவாறே அவரின் முதுகை அப்பா மெள்ளத் தட்டிக் கொடுத்தார். சற்று நேரம் வாய் விட்டு அழுது விட்டு அழுகையினூடே,

''எனக்கு என் மகன் வேணும் கோபால். எனக்குப் பின்னால் அந்த ரெண்டு பசங்களுக்கு ஒரு வழிகாட்ட... இந்தக் குடும்பத்தை வழி நடத்த... ஒரு மகன் வேணும் கோபால்'' என்று புலம்பினார். அப்பாவைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டார்.

''கோபால் இந்தக் குடும்பத்துக்கு நீ எத்தனையோ செஞ்சிருக்கே. அப்படிப்பட்ட உன்னை இப்ப நான் கஷ்டப்படுத்தறதா நினைக்காதே. நொடிச்சுப் போன இந்தக் குடும்பத்தைக் கரையேத்த மூத்தவன் இருக்கானேன்னு திருப்திப்பட்டுக்கிட்டு இருந்தேன். ஆண்டவனுக்கு அது பொறுக்கலை. அவனை எடுத்துக்கிட்டான். எனக்குப் பின்னால் திசை தெரியாமல் இந்தக் குடும்பம் நிக்காமல் இருக்க உன்கிட்டே பிச்சை கேக்கறேன் கோபால்.''

பரிதாபமாகப் புலம்பினார். அப்பாவிற்குத் தர்மசங்கடமான நிலை. ஆனால் அவர் முகத்தில் எந்தவிதமான மாறுதலும் இல்லை.

''இதோ பார் சீனிவாசா... இப்பவே

## தொலைக்காட்சியில் ஒரு தொலை நோக்கு!

தேர்தல் சமயம் எல்லாரும் ஆர்வத்துடன் பார்த்த Election Analysis என்ற நிகழ்ச்சியின் தொடக்கத்தில் வி. பி. சிங், தேவிலால் ஆகியோர் மேடையில் நின்று பேசுவது போல் காட்சி அமைத்துவிட்டு, பிரதமர் ராஜீவ் காந்தி மட்டும் வெகுவேகமாகப் படியிறங்கும் காட்சியை ஒளிபரப்பியதானது, ஆட்சி பீடத்திலிருந்து அவர் இறங்கப் போகிறார் என்பதைச் சுட்டிக்காட்டுவது போல் இருந்தது!



தெரிந்தோ, தெரியாமலோ ஒரு சரியான கணிப்பை உருவகமாக வழங்கியதற்கு, 'சபாஷ், ம. வி!'

— பி. சோலையப்பன்.

---

நான் நந்தீஸ்வரனை இங்கே விட்டுட்டுப் போகத் தயார்தான். இருந்தாலும் இதைப் பத்தி நான் ஒருத்தனே முடிவெடுக்க முடியாது. நந்தீஸ்வரன் என்ன சொல்றானோ, அவன் விருப்பம் எதுவோ, அது போலத்தான் நான் செய்ய முடியும்'' என்றவர் என்னைப் பார்த்து,

''அப்பா கூட கொஞ்ச நேரம் பேசிக்கிட்டு இரு நந்தீஸ். நான் வெளித் திண்ணையில உக்காந்துக்கிட்டு இருக்கேன். கடைசியா உனக்கு மனசுல என்ன தோணுதோ சொல்லு. அப்படிச் செய்வோம்'' என்று சொல்லி விட்டு எழுந்தார்.

அப்பொழுது பதினாறு வயது மதிக்கத்தக்க பெண்ணும், பதினான்கு வயது மதிக்கத்தக்க பையனும் உள்ளே நுழைந்தார்கள். அப்பா என்னிடம்,

''நந்தீஸ் அது மாலா... இது சேகர். ஏறக்குறைய இரண்டு பேரும் உன் ஜாடையில இருக்காங்கல்ல! சேகர் மாலா இவன்தான் உங்க அண்ணா... நந்தீஸ்வரன்'' என்று அறிமுகம் செய்து வைத்தார். என்னைப் பார்த்துச் சிநேகிதமாகச் சிரித்தார்கள். என்னுடைய முகமும் மலர்ந்தது. அப்பா அவர்கள் இருவரையும் வெளித் திண்ணைக்கு அழைத்துக் கொண்டு போனார்.

அப்பா வெளியில் போன பின்பு கூட என்னி·'·ர் அவர் எதுவும் பேசவில்லை. நானும் அவரிடம் எதுவும் பேசவில்லை. அந்த அம்மாள் காப்பி கொண்டு வந்து கொடுத்தார். வாங்கும் போது உடலில் மின்சாரம் பாய்ந்தது போல் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. காப்பியை பருகினேன். கூடவே எண்ணங்களையும்.

'இவர்கள் எனக்கு உடலும், உயிரும், ரத்தமும் கொடுத்தவர்கள்... இவர்கள் இப்படியொரு பரிதாபமான நிலையிலா? இவர்களுக்காக நான் ஏதாவது செய்துதான் ஆக வேண்டும். என்னுடைய சம்பளம் ஆயிரத்தி ஐந்நூறு ரூபாய் இவர்களுக்குப் பயன்படட்டும்! அப்பா நிச்சயம் சம்மதிப்பார். அவர் முற்போக்கானவர். அதுவுமில்லாமல் நாங்கள் நல்ல வசதியாகத்தானே இருக்கிறோம். இங்கேயே ஒரு ஆறு மாதம் இருந்து இவர்கள் நிலையை ஓரளவுக்குச் சீர்ப்படுத்தினால் என்ன? நிச்சயம் செய்துதான் ஆக வேண்டும். அப்பாவும், அம்மாவும் என்னைப் பிரிந்திருக்க மிகவும் சஞ்சலப்படுவார்களோ? அப்பாவிடம் சொல்லிப் பார்க்கலாம் என்று தீர்மானித்தேன்.

''கொஞ்சம் இருங்க. நீங்க கேட்டதுக்கு அப்பாகிட்டே கேட்டுட்டு ஒரு நல்ல பதிலா சொல்றேன்'' என்று சொல்லி விட்டு எழுந்தேன்.

''தம்பி!'' அந்த அம்மாள் அழைத்தாள்.

''என்னம்மா?''

''ஒரு நிமிஷம் இங்கே வாயேன்'' என்றவாறே என்னைக் கிணற்றடி பக்கம் அழைத்துக் கொண்டு போனாள்.

''நீ என்ன செய்யலாம்னு முடிவு செஞ்சிருக்கே'' என்று நிதானமாக, அழுத்தமாகக் கேட்டாள்.

''ஒரு ஆறு மாசம் இங்கே இருக்கலாம்னும்... என் வருமானத்தை இந்தக் குடும்பத்துக்குக் குடுக்கறதாகவும் முடிவு செஞ்சிருக்கேன். அதுக்காகத்தான் அப்பாகிட்டே கேக்கலாம்னு'' என்றேன்.

''வேண்டாம்பா. எங்களுக்காக எதுவும் செய்ய வேண்டாம். நீ பயன்பட வேண்டியதெல்லாம் எங்களுக்கல்ல... உன்னை வளர்த்து ஆளாக்கினவங்களுக்குத்தான். தன்னோட மகன் தலையெடுத்துச் சம்பாதிக்கறாருன்னு தெரிஞ்சவுடனே 'என் மகன் எனக்கு வேணும்னு' அவர் கேக்கறது கொஞ்சம் கூட நல்லாயில்லே. ஏதோ நேர்ல வந்தே... நாங்களும் பார்த்தோம்.. அது போதும். அதுவே ரொம்ப சந்தோஷம். அதுக்கும் மேலே உறவை வளர்த்துக்க வேண்டாம்'' என்று கண்டிப்பு நிறைந்த குரலில் தீர்க்கமாகச் சொன்ன பெற்றவளை மலைத்துப் போய்ப் பார்த்தேன்.

''ஆமாம்பா. இப்ப நீ மனிதாபிமானத்தோட ஆரம்பிக்கற செயல் பின்னால ரத்த பாசமா மாறிட்டா உன்னோட செய்கையும் மாறிடும். அப்போ உன்னை வளர்த்து ஆளாக்கினவங்க ஏமாந்துடுவாங்க. எங்களுக்குப் பாசம் காட்ட பசங்க இருக்காங்க. ஆனா அவங்களுக்கு நீ ஒருத்தன்தான். அதனால முழுக்க முழுக்க நீ அவங்களுக்குத்தான் பயன்படணும். எப்பவும் அவங்கதான் உனக்கு அம்மா, அப்பா.''

என்னைப் பெற்றவளின் பலம் நிறைந்த .ார்த்தைகள் என்னைச் சிந்திக்க வைத்தன... உணர ஆரம்பித்தேன்.

# தன்னம்பிக்கை



□ ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் முடியாது என்று ஒரு போதும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள் எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

□ மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும்போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கை தான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால்.. நம்மில் பலர் ஓரளவு கல்வித்தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத்தயங்குகிறோம்.

தவறாகப் பேசிவிடுவோமோ என்ற பயமும், ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான மூல காரணமாகும்.

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சி முறையை மேற்கொண்டால், தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாடவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப் பயிற்சியை மேற் கொள்ளலாம். நேர் முகப் பயிற்சியும் உண்டு. இன்றே கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

**விவேகானந்தா கல்வி நிலையம்**

தபால் பெட்டி எண் 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை.600 017.

NAGA

# இரண்டாவது சூரியன் 20

கொஞ்சம் கூட நிஜமில்லை! கார்ட்டூன் என்பதில் சிறிதளவு கூட நிஜமில்லா திருக்கும்படி திட்டமிடப்பட்டிருந்தது. பூனையை எலி விரட்டி விரட்டித் துரத்துகிறது. ஓட ஓட விரட்டுகிறது; சொல்லில் அடங்காக் கொடுமைக்கு ஆளாக்குகிறது...

வீடியோ படம் பார்த்துக் குழந்தைகள் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்கள். பூனையை எலி துரத்தி உதைக்க, சந்தோஷப்பட்டார்கள். உலகில் நிறையப் பேர் எதிர்த்துத் தாக்கத் தெரியாதவர்கள். வலிமை குறைந்தவர்கள். வலிமை உள்ளவர் கண்டு பயந்து நடுங்குகிறவர்கள். எலியும் அப்படித்தான். பூனையைக் கண்டு பயப்படும் ஜந்து. ஆனால் கார்ட்டூன் எலி, பூனையை விரட்டோ விரட்டு என்று விரட்டுகிறது. எல்லா மனிதருக்கும் இந்தப் பொய் பிடித்திருக்கிறது. குதூகலம் தருகிறது.

பானுமதிக்குக் கார்ட்டூன் மேல் மனசு போகவில்லை. ஏதாவது யோசிக்க வேண்டும் போல் இருந்தது. தனியாய் உட்கார்ந்து மனசு போனபடி யோசிக்க ஆசை வந்தது. இரண்டு மூன்று நாட்களாய்ப் பரபரப்பாக நடந்த நிகழ்ச்சிகளை மெல்ல அசை போடத் தோன்றியது.

பள்ளிக்கூடத்தில் அறுபது டீச்சர்கள் இருக்க, தான் மட்டும் ஆஸ்பத்திரிக்கு ஓட ஏன் தோன்றியது? அப்படி ஓடிய போது, இவனை யார் பின்னால் வரச் சொன்னது? வந்தவனிடம் எது உதவி கேட்க வைத்தது? என்னமோ சாவித்திரி என்கிற டீச்சருக்குப் பானுமதி, பரத் என்கிற இரண்டு ஆட்கள்தான் பொறுப்பு என்கிற மாதிரி... நாடகம் மாதிரி நடந்தது எப்படி?

ஏக்ளாஸ் நாடகம்! இப்போது சாவித்திரி மறந்தே போய் விட்டது. பரத் பேச்சும், கோபமும் கிழித்துப் போட்ட பேப்பரும், டெக் கொண்டு வந்து இணைத்த செயலும் மனத்தில் இருக்கின்றன.

நான் சாவித்திரிக்கு ஹெல்ப் பண்ணவில்லை. சாவித்திரி யார் என்று எனக்குத் தெரியாது. உங்களுக்காகச் செய்தேன்.

ஏன்?

எனக்கு நீங்க செய்தீங்க. எங்க வீட்டு வனிதாவுக்கு உதவி செய்தீங்க...

மோட்டார் சைக்கிளில் இதுவரை போனதேயில்லை. இப்போ இரண்டு முறை போய் விட்டு வந்திருக்கிறேன். கொஞ்சம் கூட கவலையே இல்லாமல் தோள் பிடித்து உட்கார்ந்து பட்டணம் முழுக்க ஊர்வலம் வந்திருக்கிறேன்.

போன வருடம் இதைச் செய்திருக்க முடியுமா? சாவித்திரிக்கு உதவியோ, வனிதாவுக்குப் பாடமோ நடத்தியிருக்க முடியுமா? பர்மிஷன் கேட்டுப் போயிருக்க முடியும். உத்தரவு வேண்டிக் காத்திருக்க வேண்டும். அப்பா! என்ன சுதந்திரம்! எனக்கு மனசுக்குப் பிடித்ததை என்னால் செய்ய முடிந்த சுதந்திரம்! உதவி செய்கிற நிறைவு, பெருமை, என்னுள் நான் வளர்த்துக் கொள்கிற காரியம்.

இவன் கூடப் பேசலாமா? இவன் கூட மோட்டார் சைக்கிளில் போகலாமா? இவனிடம் உதவி கேட்கலாமா என்று எவர் உத்தரவும் அனுமதியும் இன்றி நானே நிர்மானிக்க முடிகிற சௌகரியம்.

ஒருவேளை, பேசியவன் தவறாய் நடந்தாலும் என்னாலேயே அதைத் தடுத்து நிறுத்த முடியும் என்கிற தைர்யம் எப்போது வருகிறது? தனியே இருக்கும் போது தனியே ஒரு காரியத்தில் ஈடுபடும் போது...

கடவுளே, இப்போதுதான் வாழவே ஆரம்பித்திருக்கிறேன். இப்போதுதான் மனுஷியாக நிற்கிறேன். சாவித்திரி பிழைத்து எழுந்து விட்டால், நிச்சயம் ஓடி வந்து கட்டிக் கொள்வாள்.

பரத் எங்கே என்று கேட்பாள். இரண்டு பேரும் போய்ப் பரத்துக்கு நன்றி சொல்லலாம். எப்படித் தெரியும் பரத்தை என்று கேட்பாள். விவரம் சொல்லலாம். பதிலுக்கு ஏதாவது பண்ணனும் பானுமதி என்பாள். கடிதம் மட்டும் தேங்க்ஸ்னு எழுதாதே கிழிச்சுப் போட்டுட்டுக் கத்துவார்.

ஒரு ட்ரீட் தரலாமா? நான் நீ பரத் மூணு பேரும் எங்கேயாவது ஒரு ரெஸ்டாரண்ட்ல போய்ச் சாப்பிடலாமா? எந்த ரெஸ்டாரண்ட்? மத்ஸ்யா போகலாமா? நிதானமாச் சாப்பிடலாம். உட்கார்ந்து பேசலாம்.

சாராயம் கலக்கறதா? காச்சறது இல்லை? எப்படிக் கலக்கறது? சாவித்திரியும் கேட்பாள். எதுக்குதான் இதைக் குடிக்கிறாங்களோ, தெரியலை! ஆனா எனக்கும் ஒரு நாள் குடிக்கணும்னு. சாராயம் இல்லை.



பாலகுமாரன்

விஸ்கி. சும்மா ஒரு எக்ஸ்பீரியன்ஸுக்கு...

'ச்சேய்! என்ன இப்படி யோசிக்கிறேன்!' பானுமதி தலையை உலுக்கிக் கொண்டாள். சுதந்திரம் என்று யோசித்தால் உடனே இப்படித்தான் வரைமுறையே இல்லாது போகிறது; என்னென்னவோ யோசிக்க வருகிறது. ஒரு வருடத்திற்கு முன்பு தண்ணி போடறது பத்தி யோசிக்கக் கூடமாட்டேன். இப்போது போட்டால் என்ன என்று தோன்றுகிறது. புத்தி இருக்கிறதே! யப்பா! சங்கிலி தவற விட்டால் போதும், எல்லா இடத்துக்கும் ஓடும்.

இறுக்கிக் கொண்டு என்ன செய்யப் போகிறோம்? ஏன் யோசிக்கக் கூடப் பயப்படுகிறாய்?

ஏன் இப்படி யோசியேன்!

பரத் பெருக்கு ஓர் அர்ச்சனை பண்ணி, செத்துப் பிழைத்ததற்கு ஒரு குத்துவிளக்குப் பூஜை பண்ணி... யோசியேன்...! ட்ரீட் என்றால் ரெஸ்டாரன்ட்! ரெஸ்டாரன்டில் சோறு, குடி என்று யோசிக்கப் போகிறதே புத்தி! மாறுதலாய் யோசியேன் — மரபாய் யோசியேன்.

எத்தனை அர்ச்சனை? எத்தனை குத்துவிளக்குப் பூஜை! 'புருஷன் கோபப்படாம இருக்கணும்னா ஒருவழி சொல்லித் தர்றேன். கந்த சஷ்டி கவசம் சொல்லு. அதுல ஒரு ாட்டு, கை ஓங்கிண்டு ர்ற யாரையும் உடனே க்க வைச்சுடும்...'னு மிழ் பண்டிட் ோசனை சொன்



வாள். அவள் அப்படித்தான் செய்வாளாம். கேட்டதும் நெஞ்சில் துக்கம் பொங்கியது. வேதனை வழிந்தது. என்ன கொடுமை இது! அடிக்கிற புருஷனுக்கு எதிரே தமிழ்ப் பாட்டா? கடவுள் பதிகமா? சீ நாயே! போ என்னை விட்டு! என்று துரத்தாமல் கதவு அருகே ஒண்டிக் கொண்டு ....

உடம்பு கோபத்தால் உதறியது 'நோ' என்று எழுந்தாள்.

குழந்தைகள் திரும்பிப் பார்த்தன.

என்னம்மா என்றன.

நாகம்மா கூர்ந்து பார்த்தாள்.

"ஒன்றுமில்லை ஏதோ யோசனை. நீங்க படம் பாருங்க..." எழுந்து உள்ளே போய்ப் படம் பார்த்தாள்; தண்ணீர் குடித்தாள். மறுபடி வாசற்படிக்கு வந்து உட்கார்ந்தாள்.

ஏன் இப்படி உணர்ச்சிவசப்படுகிறேன். அடிக்கடி அவனைப் பற்றி யோசித்ததும் கோபப்படுகிறேன். மனகள் வரும் கற்பனையைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நானே கற்பனை செய்து நானே கோபப்படுகிறேன்.

தேவையற்ற கற்பனைக் · கோபம் இருக்கிறது. விடு விடு கீழே விடு கோபத்தை. இல்லாதது கற்பனை செய்து உணர்ச்சி வசப்படும் வழக்கம் விடு. இது பாதிக்கும்— உடலை, மனசைக் காயப்படுத்தும்; அயர்ச்சி தரும். குளுமையாக இரு பானு மதி. அமைதியாக இரு.

"என்னம்மா?" — பின்னால் குரல் கேட்டது. நாகம்மா அருகே வந்து உட்கார்ந் தாள்.

"ஏன் ஒரு மாதிரி இருக்கே? சினிமா படம் பார்க்கலை...?"

"இல்லை நாகம்மா... போர்!"

"நல்லா இருக்குதும்மா பூனையைத் துரத்தித் துரத்தி எலி பண்ற அட்டகாசம். பூனைக்கு பேரு டாமாம். எலிக்கு ஜெர் ரின்னு பேராம். இது மாதிரி நிறைய படம் இருக்குதாம். புள்ளை சொல்லிச்சு..."

"என்ன வேணும் உனக்கு? போய்ப் படம் பார்."

"எனக்கு ஒண்ணும் வேணாம். உனக் குத்தான் ஏதோ உழப்பலு உள்ளே. வந்து தனியா உட்கார்ந்துட்டே."

"ஒரு உழப்பலும் இல்லை. நீ போ."

"சொல்லு. நல்லா சொல்லு. ஏன் மறைக் கிறே?"

"இல்லை இனிமே அப்படி அடிமையா நடக்க முடியுமான்னு ஒரு யோசனை..."

"சொல்றதுக்கில்லை. மறுபடி மாட்ட லாம். நானு. நீ. யார் வேணா மறுபடி மாட்ட லாம்."

"என்ன சொல்றே?"

"இந்தப் படத்துலே எலி இருக்குதே — அது பூனையை அடிச்சுத் துரத்திட்டு மறுபடி பூனைகிட்டேதான் போவுது. மறுபடி சண்டை போடுது. நாய்கிட்டேயோ, கழுதை கிட்டேயோ போவலை. இன்னொரு எலி யோட நிம்மதியா இருக்கலை. இந்தப் பூனையும் எத்தனை உதைபட்டாலும் எலி யாண்டதான் கவனமா இருக்குது. எங்கே இழுப்பு இருக்கோ அங்கேதான் சண்டை."

"என்ன சொல்ற நீ?"

"எலியால சும்மா இருக்க முடியாது. பூனை எங்கேன்னுதான் தேடும்."

"புரியுது."

"அந்தப் புள்ளையாண்டானைப் பத்தித் தானே யோசனை பண்றே..."

"எந்தப் புள்ளையாண்டான்?"

"படப் பொட்டி கொண்டாந்து போட் டாரே..."

"பரத்தா?"

"வனிதா அவங்க அண்ணன். அண் ணனா? மாமனா?"

"மாமா. நான் சாவித்திரியைப் பத்தி யோசிச்சுக்கிட்டு இருந்தேன். ரொம்ப நிறைவா இருந்தது அவளுக்கு உதவி செஞ் சது. போராடி ஜெயிச்சா மாதிரி இருக்குது ஏதோ."

"கீசகவதம்னு யோசிச்சா பீமன் வராத இருப்பானா?"

"புரியலை."

"போராடி ஜெயிச்சதுக்கு அந்தப் புள்ளை யாண்டானும் காரணம்."

"ஆமா."

"அதான் யோசிச்சியான்னு கேட் டேன்..."

"யேய்! ஏதோ நக்கலா பேசிக்கிட்டே இருக்கே!"

"இல்லைம்மா. நானும் உன் மாதிரிதான். என் மனசும் அப்பப்ப அலையத்தான் அலை யுது..."

"ச்சீ! டர்ட்டி வுமன்!"

"நான் அசிங்கம் பேசலைம்மா. எங் காளு மரவேலை செய்யறவன். இழைப்புளி வச்சு வேலை செய்யுற போது பார்த்துக் கிட்டே இருப்பேன். காலைலதான் தலை மயிர் புடிச்சு அடிச்சுட்டுப் போயிருப்பான். புத்தியில அது உறுத்தும். ஆனா மனசு ஏங்கும். 'ஐயோ இந்த ஆளு மட்டும் ஆசையா, அன்பா உனக்கு என்னடி குறைன்னு கேட்கிற ஆளா இருக்கக் கூடா தான்னு தோணும். என்ன வேணா செய் வேனே உனக்கோசரம்னு கிடந்து அடிச்சுக் கும்... அந்தப் புள்ளாண்டானையே எடுத் துக்க... நீ படிச்ச பொம்பளைதானே? அப்படியும் அந்தப் பையன்தான் ஆஸ்பத் திரி சுத்தி. அவனை இவனைப் பார்த்து, ஆடாத ஆட்டம் ஆடி, சாவித்திரி அம் மாவை வேற இடம் சேர்த்துது. அது அழகு தானே? அம்சமான விஷயம்தானே? அட

"என்னோட எப்பவும் நூறு பேர் நடந்து வர்ற மாதிரியே ஒரே பிரமையா இருக்கு டாக்டர்..."

"இருக்காதா, பின்னே... போன வாரம் வரையில் மந்திரியாய் இருந்திருக் கீங்களே...!"

— சீர்காழி ஜெயா.



டான்னு தோணுதுதானே?''

''தோணுது.

''அங்கதான் சறுக்கும்! அடடா எத்தினி சாமர்த்தியம்னு கிட்டே போனா அந்த நாயும் கடிக்கும்! அதிகா'ரம் பண்ணும்.''

''யார் கிட்ட போனது?''

''நீ போனேன்னு 'சொல்லலை. 'போனா'ன்னு சொல்றேன். இது ஜென்மப் பகை. தீராது. எதிரும் புதிருமா வெச்ச பொருளு. புரியாது.

''என்ன புரியாது?''

''அவன் திமிரு நமக்குப் புரியாது. நம்ம கர்வம் அவனுக்குப் புரியாது.''

''என்னைப் பத்தி நீ ஏதோ தப்பா நினைக்கிறே நாகம்மா...''

''நாம பொம்பளைங்க. நமக்குள்ளே மனசு விட்டுப் பேசறதில்லை. இவ எப்படி, அவ எப்படின்னு சந்தேகம்தான் நமக்கு. எலியை எலி நம்பறதில்லை. அதான் பூனை கிட்டேயே வம்புக்குப் போறது.''

''குழப்பறேடி என்னை...

''இல்லை தாயே. தனிச்சு உட்கார்ந்த பொம்பளையைக் குழப்பறதுக்கு ஆளே வேணாம். அவளே குழம்பிப்பா. போ, போய் உள்ளே உட்கார்ந்து சினிமாப் படம் பாரு. புடிக்கலையா? அடுப்பு ஏத்திப் புதுசா நாலு பண்டம் செய். அதுவும் முடியலையா ஜன்னல் துணி, வாசல் துணி எல்லாம் எடுத்து குமுக்கி, தோய். யோசிக்காதே. ரொம்பக் குழப்பம்னா கோயிலுக்குப் போ. எனக்குத் தெரியலைடா சாமின்னு கும்பிட்டு வா.''

புரிகிறது! பெண் கையாலாகாதவள் என்கிறாள் நாகம்மா! யோசிக்கத் தெரியாதவள் என்று இவளும் சொல்கிறாள். ஒரு விஷயத்தைப் பாரபட்சமின்றிப் பார்க்கத் தகுதியற்றவள் என்கிறாள். உண்மையா இது? குழப்ப கேஸா பெண்? அவளுக்கு ஒரு விஷயம் ஆதியோடு அந்தம் தெளிவாய் யோசிக்கத் தெரியாதா? உணர்ச்சிவசப் படலா'குமா? இல்லை! நோ! உணர்ச்சிவசப் பட்டேன். அது பிசகு. இனி சரியாய் யோசிப்பேன். சோகமின்றி யோசிப்பேன். எலியா நான்? பூனையை வம்புக்கு இழுக்கும் ஜெர்ரியா நான்! இல்லை! நான் மனுஷி! பொழுது போகாமல் வம்புக்கு இழுத்து நாலு மூலைக்கும் நடுங்கி ஓடுகிற ஜாதி இல்லை. என்னை மீறி என்னை எவரும் ஆட்சி செய்துவிட முடியாது. இனி என்னை ஆளுமை செய்ய ஆள் இல்லை. நான் உடன்பட மாட்டேன்.

விடிந்து அரைமணி கழித்து, எழுந்து பல் தேய்த்து...ஞாயிற்றுக்கிழமையின் சோம்பல் உள்ளே சுகமாய் மிதந்தது. ஏதாவது புதுசா தின்பண்டம் செய்யலாமா என்கிற யோசனை வந்தது.

''டீச்சர்!'' — வாசலில் குரல் கேட்டது.

''யாரு நாகம்மா?''

''வனிதா.''

''என்ன வனிதா?''

''உங்ககிட்டே ஒரு தமிழ்ப் படம் மாமா கொடுத்தாரா?''

''ஆமா.''

''அதை ஒளிச்சு வச்சுக்குங்க டீச்சர்...''

''ஏன்?''

''ரெய்டு!''

''ரெய்டா? எதுக்கு?''

''அந்தப் படம் இன்னும் வீடியோல வரலை. புதுப்படம். மன்றத்து ஆளுங்க போலீஸ் கூட்டிக்கிட்டு வந்து நைட் மடக்கினாங்க... எங்ககிட்ட இல்லைன்னுட்டோம். ஒருவேளை உங்ககிட்ட யாரும் வந்தா...''

''எடுத்துக்கிட்டுப் போயிடறியா?''

''வேணாம்! மாமா எடுத்துக்கிட்டு இங்க வராதே உடனே, பீரோல ஒளிச்சு வக்கச் சொல்லுன்னுச்சு...''

''அப்புறம் என்ன ஆச்சு?''

''நாலு இங்கிலீஷ் காஸட் மட்டும் எடுத்துக்கிட்டுப் போயிட்டாங்க.''

''ஏன்?''

''அது இந்தியாவில தடை செய்யப்பட்டிருக்கு...

''என்ன படம்?''

''யேசு கிறிஸ்துவை கேலி பண்ணி ஒரு படம். அப்புறம் வேற ஏதோ இரண்டு. கடையை மூடச் சொல்லிட்டாங்க. கேஸ் போட்டிருக்காங்க.''

''ஐயோ!''

''மாமா போலீஸ் கமிஷனரைப் பார்க்கப் போயிருக்கு. எம். எல். ஏ. வீட்டுக்குப் போகணும்னுச்சு.''

''எந்த எம். எல். ஏ?''

''அறிவுமதி!''

''எனக்குத் தெரியுமே அவரை.''

''நான் மாமாகிட்டச் சொல்லட்டா?''

பானுமதி பேசாமல் நின்றாள். அறிவுமதி எம். எல். ஏ. தெரியும். முதல்வர் வீட்டில் பார்த்திருக்கிறாள். 'உங்கள் கணவரின் கவிதைகள்தான் எனக்குத் தமிழ் ஆர்வமே கொடுத்திருக்கிறது' என்று பேசியிருக்கிறார். அது பழைய கதை. கழித்துவிடப் பட்ட கணவனின் மூலம் கிடைத்த அறிமுகம். இப்போது அவரை என்னவென்று பார்ப்பது? இது சரியா, தவறா?

'நான் வேணாம்; நம்ம கட்சி ஆளு வேணுமா? — கேள்வி வருமோ? கேலி வருமோ? பரத்துக்கு உதவ முடியாதோ?'

குழம்பினாள்.

எலி பூனையிடம் வம்புக்குப் போவது நினைவுக்கு வந்தது.

(தொடரும்)



# ஸ்ரீபெட்
# 'CHUBBY'

**சின்னஞ் சிறியதே கண்ணுக்கு அழகு!**

உங்கள் கைப்பைக்குள் வைத்துக்கொள்ளும் அளவுக்குச் சின்னதாக, எல்லா இடங்களுக்கும் எடுத்துச் செல்லக்கூடிய அளவுக்கு அழகான பாட்டில்கள். நீர் கசியாது. அரை லிட்டர் 'CHUBBY' பாட்டில்கள் எங்கும் கையோடு எடுத்துச் செல்வதற்கு ஏற்றவை.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும் கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை பளிச்சென்று காண்பிப்பவை. உடையாதவை. உணவுப் பொருட்களைப் பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும் வாய்ந்தவை. நெடியற்றவை. கனமில்லாதவை. உபயோகிக்க வசதியானவை.

60 டிகிரி சென்டிகிரேட் வரை உஷ்ணத்தைத் தாங்கக் கூடியவை.





பெட் இண்டஸ்டிரியல் கன்ஸ்யூமர்
பாக்கேஜ் பிரைவேட் லிமிடெட்,
3வது மாடி, சூகாம்பிகா
காம்பிளெக்ஸ்,
4, வேடி தேசிகாச்சாரி சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 73768/74960







ADWAVE/PET/3830 TAM A

19

# பிரபஞ்சத்தின் எல்லையை நோக்கி...

சுஜாதா

சென்ற அறுபது வருடங்களில் இரட்டை இறக்கை சின்ன ப்ளேன்களிலிருந்து ராக்கெட் வரை மனிதன் முன்னேறி விட்டான். சந்திரனில் காலடி வைத்து விட்டான். செவ்வாய், வீனஸ் போன்ற கிரகங்களில் நாம் அனுப்பி வைத்த கருவிகள் இறங்கி, அந்தக் கிரக மண்ணைத் தூரத்தில் ஆராய்ச்சி பண்ணி, செய்தி அனுப்பியிருக்கின்றன. சனி, மெர்க்குரி, ஜுபிட்டர் போன்ற கிரகங்களைக் கிட்டத்தில் போட்டோ எடுத்து விட்டோம்.

இருந்தும் விண்வெளிப் பயணம் செய்து நட்சத்திரங்களை அடைதல் என்பதெல்லாம் இன்றைய விஞ்ஞான முன்னேற்றத்தில் இயலாத காரியமாகவே தோன்றுகிறது. அப்போலோ ராக்கெட்டுகள், இன்றைக்கு 3,75,000 கிலோமீட்டர் தொலைவில் உள்ள சந்திரனை எய்த மூன்று தினங்கள் ஆயின. பயனியர் 10, 11; வாயேஜர் 1, 2 என்ற நான்கு விண்கப்பல்களை நாம் இதுவரை நட்சத்திரங்களை நோக்கி அனுப்பியுள்ளோம். 1973 – இல் புறப்பட்ட பயனியர், ஒரு செகண்டுக்குப் பதினாறு கிலோமீட்டர் வேகம் பெற்று, 1987 – இல் நம் சூரியக் குடும்பத்தை விட்டு விலகி வெளியே பயணப்பட்டது. நம் சூரியக் குடும்பத்துக்கு மிக அருகே உள்ள நட்சத்திரம் ஆல்ஃபா செண்டாரி என்பது. அதை அடைய, நம் தற்போதைய வேகங்களில் 80,000 வருடங்கள் ஆகும்! அடுத்த வீடு இது!

விண்வெளியில் தூரங்களைக் குறிக்க 'ஒளி வருஷம்' என்கிற சொல்லைப் பயன்படுத்துவோம். ஒளி ஒரு செகண்டுக்கு

* ராம்ஸ்கூப் – சித்திரக்காரர் கற்பனை.



கல்கி 3.12.89 இதழில் சுஜாதா கொடுத்திருந்த புதிருக்கு மறுவாரம் அவர் தந்திருந்த விடைகளையே பத்துக்குப் பத்து சரியாக ஊகித்து எழுதியவர் யாருமில்லை. எட்டு விடைகளைச் சரியாக ஊகித்து எழுதியவர்கள் மூன்று பேர். இந்த மூன்று கடிதங்களில் முதலில் நமது பார்வையில் பட்ட கடிதத்தை எழுதியவர்:

ஆர். சுப்பிரமணியம்,
47, மந்தைவெளி சந்து,
மயிலாப்பூர், சென்னை — 600 004.

இவருக்கு சுஜாதா எழுதிய புத்தகம் ஒன்று பரிசாக அனுப்பி வைக்கப்படுகிறது.

— ஆசிரியர், கல்கி.

3,00,000 கிலோமீட்டர் செல்கிறது. இப்படி ஒரு வருடத்தில் அது கடக்கும் தூரம் ஓர் ஒளி வருடம்.

சூரியனிலிருந்து நமக்கு ஒளி வந்து சேரச் சுமார் எட்டு நிமிடங்கள் ஆகிறது. நம் சூரியக் குடும்பத்தின் வெளி விளிம்பில் இருக்கும் ப்ளூட்டோ கிரகத்தை ஒளி எய்த ஐந்தரை மணி நேரம் ஆகும். ஆல்ஃபா செண்டாரிக்குச் சுமார் நாலரை வருடங்கள். இதுதான் மிகமிகக் கிட்டத்தில். நம்முடைய பால்வீதி என்னும் காலக்ஸி மட்டும் நூறு பிலியன், நூறாயிரம் கோடி நட்சத்திரங்கள் கொண்டது. இதைக் கடக்க ஒரு லட்சம் ஒளி வருடங்கள் ஆகும்! ஒளி வருஷம்; — வெறும் வருஷமல்ல...

எனவே நம் மனித சரித்திரத்தின் எதிர்காலம் அத்தனையிலும் இத்தனை தூரம் கடக்கும் சாத்தியம் ஏற்பட இரண்டு வழி உள்ளது. நாம் அனுப்பும் விண்கலம் மிகமிக வேகமாகச் செல்ல வேண்டும். அப்படிச் சென்றாலும் ஒளியின் வேகத்தை மிஞ்ச முடியாது. அதனால் 'தலைமுறை விண்கலம்' ஒன்று அனுப்ப வேண்டும். தலைமுறை விண்கலம் என்பதில், ஒரு சில அப்பா அம்மா வேலைக்காரர்கள் என்று ஒரு கூட்டுக் கு டு ம் ப ம் போல் விண்வெளியில் அனுப்ப வேண்டும். அவர்கள் விண்கலத்திலேயே இனவிருத்தி பண்ணிக் கொண்டு... முதலில் கிளம்பினவர்களின் கொள்ளுப் பேரன்களின் எள்ளுப் பேத்திகள்; இறுதியில் போய்ச் சேரும்படியான ஒரு தலைமுறைத் திட்டம் வரலாம். அல்லது மருத்துவ முன்னேற்றத்தினால் பயணிகளை ஒருவித நீண்ட ஆயுளில் நீட்டித்து... இம்மாதிரி திட்டங்களும் உள்ளன.

விண்கலங்களின் வேகத்தை ஓரளவுக்குத்தான் அதிகரிக்க முடியும். அதற்கு மேல் நம்மால் தாங்க முடியாது. ரொம்ப ஆரோக்கியமான ஓர் ஆசாமி, புவிஈர்ப்பு விசையைப் போலப் பதினைந்து மடங்குக்கு மேல் தாங்க முடியாது — கூழன்று விடுவான். மேலும், ராக்கெட்டுக்கு எரிபொருளே, தூரப் பயணம் என்பதால், தொண்ணூறு சதவிகிதம் இடத்தை அடைத்து, பயணிகளுக்கு ஒரே ஒரு நாற்காலி அளவுக்கு இடம்தான் பாக்கியிருக்கும். இதனால் எதிர்கால விண்கலங்கள் பூமியிலிருந்து கிளம்பாமல், புவிஈர்ப்பின் ஆதிக்கத்தின் விளிம்பிலிருந்து கிளம்பலாம்.

எரிபொருளுக்குச் சின்னச் சின்ன ஹைட்ரஜன் வெடிகுண்டுகளைப் பயன்படுத்தி, அவற்றைக் கட்டுப்படுத்தி, ஃப்யூஷன் தத்துவத்தின்படி ப்ளாஸ்மாவாக மாற்றி.... அ ல் ல து அயான் டிரைவ் (Ion Drive) என்னும் முறையைப் பயன்படுத்தி...

எல்லாமே பேப்பரில்தான்! நடைமுறையில் இல்லை. இருந்தும் அத்தனையும் இயற்

"பாகவதர் ஏகப்பட்ட சிஷ்யர்களைத் தயார் பண்ணியிருக்கார்!"

"ஆபத்து அவரோட ஒழிஞ்சதுன்னு நிம்மதியா இருக்க முடியாது..."







"இன்னும் நீங்க நிறையச் சொந்த சாகித்யங்கள் பாடணும்! தியாகைய்யர், தீட்சிதர், ஸ்யாமா சாஸ்திரிகள், புரந்தரதாசர் இவங்களெல்லாம் ஒரு வழியாத் தப்பிச்சுக்குவாங்க!"

பியல் விதிகளின்படி சாத்தியமே! நடைமுறைதான் கொஞ்சம் கஷ்டம். அதனால் விஞ்ஞானிகள் இந்தக் கற்பனை விண்கலங்களைப் பற்றிச் சிந்திப்பதை நிறுத்துவதில்லை.

**வி**ஞ்ஞானக் கதை பண்ணுகிறவர்கள் சொல்வது அனைத்தும் ரீல் என்று சொல்ல முடியாது. சில சந்தர்ப்பங்களில் விஞ்ஞானக் கதை நிஜ விஞ்ஞானத்துக்கு மிக அருகே இருக்கும். ஆர்தர் கிளார்க் என்பவர் 'நாற்பதுகளில் ஒரு கட்டுரையில் சொன்ன தத்துவம்தான் இன்று இன்சாட் போன்ற செயற்கைக்கோள்கள். இம்முறையில் விண்வெளிப் பயணத்துக்கு 1960 – இல் ராபர்ட் புஸார்ட் சொன்ன யோசனை வசீகரமானது. அவர் சொற்படி அனுப்பும் விண்கலத்துக்கு எரிபொருளே வேண்டாம். விண்வெளி முழுவதும் பரவியிருக்கும் ஹைட்ரஜனை உறிஞ்சி வாங்கிக் கொண்டு, அதை சூப்பர் கண்டக்டர் சுருள் மூலம் அனுப்பி அயான்களாக ஆக்கி.... சக்தி பெற்றுப் பயணம் செய்யும். இவ்வகை விண்கலத்தின் எடை லட்சம் டன்! அது விண்வெளியில் ஹைட்ரஜன் சேகரிக்கும் பரப்பு 34,100 கிலோமீட்டர்...! இத்தகைய விண்வெளிக் கப்பல் ஒளியின் வேகத்துக்கு மிக அருகே பயணம் செய்ய வல்லது. இதனால் ஐன்ஸ்டைனின் ரிலேட்டிவிட்டி சித்தாந்தத்தின்படி கப்பலுக்குள் காலம் குறையும்! அதாவது ஒரு மணி என்பது ஒரு செகண்டாகக் குறுகும்.

இதன் விளைவாகப் பூமியிலிருந்து புறப்பட்டுப் பல ஆயிரம் வருடங்களுக்குக் கலத்தில் உள்ளவர்களுக்கு இருபது வருடங்கள்தான் கடந்திருக்கும். அந்தப் பாக்கியசாலிகள் நம் காலக்ஸியின் விளிம்புக்குச் சென்று விடுவார்கள்.

இவ்வாறாக ஒரு வாழ்நாளில் (கப்பலுக்கு உள்ளே இருப்பவர்களின் ஒரு வாழ்நாள்) பிரபஞ்சத்தின் எல்லைக்கே சென்றுவிட முடியும்.

பஸ்ஸார்டின் 'ராம்ஸ்கூப்' என்னும் இந்த விண்கலத்தின் சாத்தியத்தைப் பலர் கடுமையாக விமர்சித்திருக்கிறார்கள். இருப்பினும் இதில் ஏதும் மாயமந்திரம் இல்லை. எல்லாமே இயற்பியல் விதிகளின்படி சாத்தியம்.

ஒரு நடை போய்விட்டு வரலாமா? டிபன் பாக்ஸ் குடை எல்லாம் தயாரா?

இந்த வாரக் கேள்வி:

ஓர் ஒளி வருடத்திற்கு எத்தனை செகண்டுகள்?

சென்ற வாரக் குவிஸ் விடைகள்: 1) மிடி, 2) மோடம், 3) ஐ. எஸ். டி. என்., 4) டிஜிட்டல் மாற்றம், 5) சிலிக்கன்.

எப்படி உங்கள் ஞாபக சக்தி...?

(தொடரும்)



## படத்திலே ஒரு புதிர்!

* யார் இந்தச் சிறுவன்? எதைப் பார்த்துப் படிக்கிறான்? அல்லது பாடுகிறான்?

* வாத்தியத்துக்குப் பின்னால் உட்கார்ந்து கூலிங் கிளாஸைத் தலைமேலாகப் போட்டுக் கொண்டு குறும்புச் சிரிப்புச் சிரிக்கும் இந்தக் குழந்தை... யார் தெரிகிறதோ?

விடை 53 – ஆம் பக்கம்.





* யக்ஞராமன்: ஆயிரம் ரூபாய் சீசன் டிக்கெட்!



* ஜி. ஜே. ஆர். கிருஷ்ணன்: இருமுறை மேடையில்...



* பாஞ்சாலி சபதம் [illegible]

# இந்த வருடம் என்ன ஸ்பெஷல்?



* லக்ஷ்மி விசுவநாதன்: ராமாயணத்தில் மூன்று பெண்கள்....

* சேஷகோபாலன்: பாரதி பாடல்கள் மட்டுமே

00 அரங்கத்தில் வித்வான் ராக ஆலாபனை செய்து கொண்டிருக்கும் போது கான்டீனில் அரசியல் நிரவல் நடந்து கொண்டிருந்தால் வியப்பதற்கில்லை. வி.பி. சிங் ஆட்சி எத்தனை காலம் நீடித்து நிலைக்கும் என்பது நிச்சயம் அலசப்படும். 'தேவிலால் பிரதமருக்குத் துணையா? தலைவலியா?' என்ற பட்டிமன்றமும் நடக்கலாம்!

00 'தமிழிசையில் இரவு ஒன்பதரை மணிக் கச்சேரியைக் கேட்கக் கூட்டம் வருவதில்லை என்பதை உணர்ந்தும் ஏன்தான் பிடிவாதமாக நடத்துகிறார்களோ' என்று சென்ற வருடம் சற்றுக் காரமாகவே எழுதியிருந்தோம். இந்த வருடம் ஆறு மணிக் கச்சேரியோடு அழகாக நிறுத்திக் கொண்டு விட்டார்கள்! அப்படியானால் அதற்கு முந்தைய மூன்றரை மணிக் கச்சேரிகளும் முதல் தர ஸீனியர் வித்வான்களாக இருக்க வேண்டுமே? ஆம், அப்படித்தான். சேஷ கோபாலன், ஷேக் சின்ன மௌலானா, ஏ. கே. சி. நடராஜன், பாம்பே சிஸ்டர்ஸ், மணி கிருஷ்ணசாமி என்று எல்லாருமே மணியான கலைஞர்கள். சேஷ கோபாலன் பாரதி பாடல்களை மட்டுமே பாடப் போகிறாராம்!

00 அகாடமியில் எப்போதுமே வெளிநாட்டார் ஆக்கிரமிப்புக் கொஞ்சம் அதிகம் தான். இந்த வருஷம் விதிவிலக்கு அல்ல. சிவதாண்டவம் பற்றி ஆன் மாரி காஸ்டன்; உத்தரப் பிரதேச கலாசாரம் மற்றும் இசை பற்றி அமெரிக்கர் டாக்டர் எட்வர்ட் ஹென்றி; தமிழ்ப் பதங்கள் பற்றி மாத்யூ ஆலன் என்று நமது கலைகளுக்கு வணக்கம் செலுத்தும் வெளிநாட்டவர் பட்டியல் நீள்கிறது!

00 அகாடமி காலை நிகழ்ச்சிகளில் சுவாரஸ்யம் அதிகரிக்க நம்மவரும் முயற்சி மேற்கொள்கிறார்கள்: கிருஷ்ணவேணி லக்ஷ்மணன் — பரதநாட்டியத்தில் 'அஷ்ட நாயிகா'; டி. கே. மூர்த்தி — தஞ்சாவூர் வைத்தியநாத அய்யரின் மிருதங்கபாணியும் உத்தியும்; எல். சுப்பிரமணியம் — கிழக்கும் மேற்கும் என்ற தலைப்பில் வீடியோ நிகழ்ச்சி, என்றிப்படி...

00 ஸ்டார் அட்ராக்ஷன்: ரவிசங்கரின் சித்தார் இசைக் கச்சேரி எனில், ஆச்சர்யங்கள்; லால்குடி ஸோலோ உண்டு என்பதும் கே. வி. நாராயணசாமி பாடவில்லை என்பதும். லால்குடி ஸோலோ விஷயத்தில் அகாடமி தன் கொள்கையை விட்டுக் கொடுத்திருப்பது புரிகிறது. கே. வி. என். பாடாமலிருப்பதற்குச் சரியான காரணம் தெரியவில்லை. 'மனைவிக்கு சான்ஸ் தரவில்லை என்பதால் பாடவில்லை' என்று பேசப்படும் காரணம் உண்மையாயிருக்கக் கூடாதே, ஆண்டவா!

00 இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் காலை நிகழ்ச்சிகள் சுவாரஸ்யமானவை. ஓர் இசைக் கச்சேரி என்றால் இப்படி அமைய வேண்டும் என்று கச்சிதப்படுத்தித் தந்தவர் அரியக்குடி. அவருடைய சீடரான கே. வி. நாராயண சுவாமி. அதனை மேலும் விவரித்துப் பேச விருக்கிறார். நிபுணர்கள் அலசும் வேறு சில தலைப்புக்கள்: மகா வைத்தியநாத அய்யரின் மேளராகமாலிகா; தற்காலச் சூழ்நிலையில் இசை கற்பிக்கும் முறை; பரத நாட்டியத்தில் பாவங்கள்; தீட்சிதர் கிருதி களில் விநாயகர்!.....

00 ரொம்ப வருஷங்களுக்குப் பிறகு மகாராஜபுரம் சந்தானம் ஃபைன் ஆர்ட் ஸில் பாடுகிறார். 'இந்நாள் வரை ஏன் பாடவில்லை' என்று குடைந்து கொண்டி ராமல் இப்போது பாடுவதற்காக மகிழலாம். ஆனால் இளம் நடனக் கலைஞர்களை ஊக்குவிக்க நடக்கும் 'டேலண்ட் பிரமோ ஷன்' நிகழ்ச்சியைப் பிற்பகல் ஒரு மணிக்கு வைத்திருக்கும் கொடுமைக்காக வருந்தத் தான் வேண்டும்.

00 கிருஷ்ண கான சபாவின் வளர்ச்சி நிதிக்காக என்றே இந்த வருஷத்துக் கலை விழாவை நடத்துகிறார் யக்ஞராமன். ஆயிரம் ரூபாய் சீசன் டிக்கெட்டாம்! வேறு யாருக்கு இத்தனை துணிவு வரும்?

00 நிருத்திய சூடாமணி விருது பெறும் நடனக் கலைஞர் கமலா, பரதக் கலைக்குப் பொன் விழாக் காலம் சேவை செய்திருக் கிறார். எனவே அவருக்குப் பட்டம் தவிர சன்மானமும் தங்கத் தோடாவும் உண்டு!

00 லால்குடி ஜி. ஜே. ஆர். கிருஷ்ணனை இரண்டு தடவை இங்கே மேடையில் பார்க்கலாம். ஒருமுறை அப்பாவுடன்; இன் னொரு முறை தங்கையுடன்! 'கிருஷ்ண கான சபாவா? ஜி. ஜே. ஆர். கிருஷ்ண கான சபாவா?' என்று சிலர் இப்போதே முணுமுணுக்க ஆரம்பித்து விட்டார்கள்!

00 இங்கு தலைமை வகிக்கும் கதக் ராணி சிதாரா தேவி, சூடாமணி பட்டம் பெறும் கமலா இருவருக்கும் நிகழ்ச்சிகள் உண்டு. தவிர ஒடிஸி, பரத நாட்டியம் நிகழ்ச்சி களில் சஞ்சுக்தா பாணிக்கிராஹி, மாதவி முட்கல், சுதாராணி ரகுபதி, சித்ரா விசுவேசுவரன், அலர்மேல் வள்ளி, பத்மா, வாணி கணபதி என்று ஒரே ஜாஜ்வல்யம்! புதுமை என்ற பெயரில் சில அறிவு ஜீவி களுக்கு மட்டுமே மகிழ்ச்சி அளிக்கக்கூடிய சந்திரலேகாவின் 'லீலாவதி' வேறு!

00 லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன் என்று எடுத்துக் கொண்டால் ராமாயணத்தில் மூன்று பெண் பாத்திரங்களை அபிநயத் தில் வெளியிடப் போகும் லக்ஷ்மி விசுவ நாதன்; ஒடிஸி பற்றி சோனால் மான்சிங்; பரத நாட்டிய உடைகள் பற்றி சித்ரா விசுவேசுவரன் என்று நடன ரசிகர்களுக்கு நல்விருந்துதான்.

00 இவையெல்லாம் போதாக்குறைக்கு சென்ற வருடம் போலவே ரசிகர்களை சொக்க வைக்க பீம்சேன் ஜோஷி வரு கிறார்; கிருஷ்ண கான சபைக்கு.

00 அடையாறு, கலாக்ஷேத்ராவில் என்ன புதுமை? பாரதியாருடைய பாஞ்சாலி சபதத்தை நாட்டிய நாடகமாக வழங்கப் போகிறார்கள். ருக்மிணி தேவிக்குப் பிறகு உருவாகும் இன்னொரு புதிய நிகழ்ச்சி என்பதால் ஏகப்பட்ட எதிர்பார்ப்பைக் கிளறி விட்டிருக்கும் இந்த நாட்டிய நாடகம், கிருஷ்ணவேணி மேற்பார்வையில் தயாரா கிறது.

00 இன்னும் கபாலி ஃபைன் ஆர்ட்ஸ், தியாக பிரும்ம கான சபா, மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ், கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ், பாரத் கலாசார், சுஸ்வரா என்று திரும்பின பக்கமெல்லாம் விருது வழங்கு தலும் கலை விழா நிகழ்ச்சிகளும்தான்! ஜமாய்கட்டும். அப்புறம் பதினொரு மாதங் களுக்குக் கொட்டாவி விடலாம் பாருங்கள்!

— நிருபர்



* ரவிகிரன்

**51— ஆம் பக்க விடை:**

* இன்று பிரபலமான முன்னணிப் பாடகராக விளங்கும் டி. வி. சங்கரநாராயணன்தான் அந்தச் சிறுவன்! தமது மாமாவும் குருவுமான மதுரை மணி அய்யர் மியூஸிக் அகாடமியில் சங்கீத கலாநிதி பட்டம் பெற்றபோது அவரது தலைமையுரையை அவர் சார்பில் வாசிக் கிறான்!
* ரவிகிரன் இன்று பிரபல கோட்டு வாத்தியம் வித்வான். பாலகனாக இருந்த போதே அபூர்வ ராகங்களைக் கூட இனம்கண்டு கூறிப் பத்திரிகைகளால் கொண்டாடப் பெற்றவன்.





* டி. வி. சங்கரநாராயணன்

# சிரிப்புக் கச்சேரி

**புல்லாங்குழல் ரமணி:**

ஒரு முறை பெங்களூருக்கு ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தேன். சக பயணி ஒருவர், "நீங்கள் யார்?" என்று கேட்க, நான், பொதுவாய், "சென்னையைச் சேர்ந்த ஓர் இசைக் கலைஞர்" என்று சொல்லி விட்டேன். சில வினாடிகள் தாமதித்து, "ஓ! நீங்கள்தானே பிரபல வீணை வித்வான் லால்குடி ஜெயராமன்?" என்று அவர் கேட்டார்! நான் அதிர்ந்து போனேன்! என்ன பதில் சொல்வது என்றே தெரியாமல், அவரையே ஆச்சரியமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தேன். இன்று அந்தச் சம்பவத்தை நினைத்தால் சிரிப்பு வருகிறது. கூடவே, விஷயம் தெரிந்தும் வேண்டுமென்றே என்னைக் கிண்டல் செய்ய அப்படிக் கேட்டிருப்பாரோ என்கிற சந்தேகமும் எழுகிறது!



* ரமணி



* சேலம் ஜெயலட்சுமி

**சேலம் ஜெயலட்சுமி:**

அமெரிக்காவில், பிட்ஸ்பர்க்கில் கச்சேரியை முடித்துக் கொண்டு, அடுத்த கச்சேரிக்காக வாஷிங்டன் புறப்பட்டேன். வாஷிங்டன் விமான நிலையத்தில், கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவர்கள் வந்து என்னை அழைத்துக் கொண்டு போவதாய்ச் சொல்லியிருந்தார்கள். ஆனால் ஒருவரும் வரவில்லை. அப்போது ஏற்பட்ட படபடப்பில் எந்த அரங்கில் கச்சேரி என்று பெயர் கூட மறந்து விட்டது! ஒரே டென்ஷன். அப்புறம்தான் விஷயம் புரிந்தது. வாஷிங்டனில் இரண்டு விமான நிலையங்கள். ஒன்றில் நான் காத்திருக்க, அவர்கள் இன்னொன்றில் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்! இரண்டுக்கும் இடையில் வெகு தூரம். நேரமாகி விடும் என்பதால் இந்த விமான நிலையப் பகுதியில் வசிக்கும் ஒரு நண்பருக்கு போன் செய்து விமான நிலையத்திலிருந்து என்னைக் கச்சேரி அரங்கிற்கு நேரே அழைத்து வந்துவிடச் சொல்லி இருக்கிறார்கள். இப்போது நினைத்தால் சிரிப்பு வருகிறது: ஆனால் அன்று? கிட்டத்தட்ட அழும் நிலைக்கே நான் வந்துவிட்டிருந்தேன்!

— மௌஷ்மி.

---

மனைவி: மினிஸ்டர் வீட்டு வேலைக்காரியை நம்ம வீட்டுலயும் வேலைக்கு வச்சுக்கிட்டது தப்பாப் போச்சு...!

கணவன்: ஏன்...?

மனைவி: ஒவ்வொரு தடவையும் 'மாண்புமிகு முனியம்மா'ன்னு கூப்பிடச் சொல்றா!

— வி. கி. குமார்.



# பொன்னான கைகள் புண்ணாகலாமா?




புதிய
# அல்ஃபா

பாத்திரங்களை தூய்மையாக்கும் புதுமையான பேஸ்ட்

உங்கள் கைகளை பாதுகாக்கவே
பிரத்தியேகமாக தயாரிக்கப்
பட்டது. அதே சமயம் சிக்கன
மாக, மிக சுலபமாக அழுக்கை
யும், எண்ணெய் பிசுக்கையும்
அகற்றி எந்தவித பாத்திரங்களை
யும் நொடிப்பொழுதில்







புதுமையான பேஸ்ட்

<u>கிடைக்குமிடங்கள்:</u> சென்னை:
கில்கிரிஸ், விதான் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் - மயிலாப்பூர். ஸ்டாப் & ஷாப், காமதேனு கிளைகள், ரத்னு ஸ்டோர்ஸ், பொன்னி மெட்டல்ஸ், பொன்னி ஸ்டோர்ஸ், ஸலாம் ஸ்டோர்ஸ், பாண்டி பஜார், முருகன் ஸ்டோர்ஸ் (பாத்திர கடை) தி.நகர். பாலசுப்ரமணியம் மெட்டல்ஸ், நங்கநல்லூர்.
<u>வியாபார விசாரணை</u> - விஸ்வம் ஏஜென்சீஸ்,.27, கனகாம்மாள் காலனி, பழவந்தாங்கல், சென்னை-114
போன்: 435020.



* மரபு மீறி...

# தமிழ்க்குடிமகன் செய்தது சரியா?

* ஆ. புகாரி, தக்கோலம்.

? வி. பி. சிங்கின் தற்போதைய பலம் எது? பலவீனம் எது?

! பலம் பா. ஜ. க. ஆதரவு. பலவீனம் சந்திரசேகர் அண்டு கோ.

* ஜான் பாண்டியன் சூஸோ, திருச்சி.

? 'உலகத்துக்கு ஊழலைக் கற்றுக் கொடுத்ததே தி. மு. க. தான்' என்று வாழப்பாடி கூறியுள்ளாரே?

! தமது முன்னோர்களை வாழப்பாடி யார் இவ்வளவு சுலபமாக மறக்கலாமா? முந்திரா ஊழல் என்ன? ஜீப் ஊழல் என்ன? நில உச்சவரம்புச் சட்டத்தைச் சமாளிக்க நடந்த பேரங்கள் என்ன ... என்ன! என்ன! என்ன!

* மஞ்சுதேவன், கல்கத்தா.

? டீ. வி. யில் தேர்தல் செய்திகளைத் தொகுத்து அளித்த ப்ரணாய், வினோத் ஜோடி பற்றி?

! தேர்தல் செய்திகளை உடனுக்குடன் தெரிந்து கொள்ள நம்மைக் கல்கத்தா, பம்பாய், பெங்களூர் என்று பல இடங்களுக்கும் அழைத்துப் போன நேர்த்தியும் விஞ்ஞான வளர்ச்சியும் 'பேஷ்' சொல்ல வைத்தன. ஆங்கிலத்தில் பேசப்பட்டவற்றை ஹிந்தியிலும், ஹிந்தியில் கூறப்பட்டவற்றை ஆங்கிலத்திலும் சுருக்கமாகவும், தவறின்றியும் மொழி பெயர்த்த வினோத்துக்கு சபாஷ்! தலைவர்களின் தேர்தல் பிரசாரங்களின் போது சில காட்சிகளை எடுத்து வைத்துக் கொண்டு, வெற்றி தோல்விகள் செய்தியாக வரும்போது அந்த ஸ்டாக் ஷாட்டுகளைப் பயன்படுத்தியிருந்தால் இன்னும் சுவை கூடியிருக்கும்.

* டி. தே. ஜானிபிரபு, குடியாத்தம்.

? சந்திரசேகர், தம்மை அனைவரும் ஏமாற்றி விட்டதாகக் கூறுகிறாரே?

! பின்னே, தாம் மற்ற அனைவரையும் ஏமாற்றப் பார்த்ததையா சொல்லுவார்?

* எஸ். கோபாலன், சிதம்பரம்.

? 'ஈசுவர அல்லா தேரே நாம்' என்று எந்த இஸ்லாமிய சோதரராவது சொல்லட்டுமே பார்க்கலாம்?

! 'அவர் முதலில் கூறட்டும், பிறகு நான் சொல்கிறேன்' என்றில்லாமல், முதலில் நாம் கூறி அன்பு செலுத்தினால், அந்த அன்பு, எதிரொலியாக அன்பை உருவாக்காமல்போகாது. இம்முறையைக்கையாண்டு தான் வல்லரசுகள் கூட அண்மையில் ஆயுதக் குறைப்பு முயற்சியில் வெற்றிப் படிகளில் உயர்ந்திருக்கின்றன. ஸப்கோ ஸன்மதி தே பகவான்!

* எஸ். வாணிசங்கர், சென்னை — 5.

? தேர்தல் சமயத்தில் சபாநாயகர் தமிழ்க்குடிமகன் தி. மு. க. ஆதரவுப் பிரசாரம் செய்தது சரியா?

! சபாநாயகர் அவையில் மட்டுமின்றி அதற்கு வெளியேயும் கட்சி சார்பற்றுச் செயல்படுவதுதான் நல்லது. நாடாளுமன்றத் தேர்தல் பிரசாரத்தில் அவர் ஈடுபட்டிருக்க வேண்டிய அவசியமேயில்லை. மரபு மீறியது மல்லாமல், யாதவ மக்களின் ஜாதி உணர்வு



* பலம்? பலவீனம்?



* பிரதமரின் நன்றி

களைத் தூண்டிவிடும் வகையில அவர் பேசியுள்ளது கண்டிக்கத்தக்க விஷயமாகும். சட்டசபை மீண்டும் கூடும்போது, எதிர்க்கட்சிகள் இந்தப் பிரச்னையை எழுப்பும் என எதிர்பார்ப்போம்.

* ஏ. பி. வரதராஜபெருமாள், திருத்தங்கல்.

? ராஜ்மோகன் காந்தி தோல்வி பற்றி?

! தேர்தல் தோல்வி எதிர்பார்க்கப்பட்ட ஒன்று. ஆனால் ராஜ்மோகன் பெற்ற எதிர்பாராத வெற்றிகள் பல. எழுநூறு கோடி

செலவில் போஷிக்கப்பட்ட தொகுதியில் பிரதமரை எதிர்த்து நிற்க முன்வந்ததே வெற்றி; பண பலத்துக்கு எதிராகச் சலியாமல் உழைத்து மக்களுக்கு விழிப்புணர்ச்சி ஏற்படச் செய்ததில் வெற்றி; காங்கிரஸ் பயந்து போய்த் தேர்தல் தில்லுமுல்லுகளில் இறங்கியது மீண்டும் ராஜமோகனுக்கு வெற்றி; அந்தத் தில்லுமுல்லுகளை அம்பலப் படுத்தியதில் வெற்றி; மோசடிகள் நடந்ததைத் தேர்தல் கமிஷன் ஒப்புக் கொண்டு பல்வேறு பகுதிகளில் மறு தேர்தலை நடத்தியது ராஜமோகனுக்கு மேலும் ஒரு சிகரமான வெற்றி.

*** டி. பரிமேலழகன், சென்னை — 45.**

**? தேவிலால் துணைப் பிரதமரானது குறித்து?**

! ஒரு சாணக்கியம் நடத்திப் பிரதமர் பதவியைப் பெற்றுத் தந்ததற்கு வி. பி. சிங் செலுத்தும் நன்றியாக இருக்கலாம். பிரச்னைக்குரியவரைப் பக்கத்தில் வைத்துக் கொள்வது நல்லது என்ற தீர்மானமாக இருக்கலாம். அல்லது வழியோடு போகிற தொல்லையை விலைக்கு வாங்கிக் கொண்டதாகவும் முடியலாம்!



* ஏமாற்றம்!



* கலபமாய் மறந்தார்!

*** வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை.**

**? வெற்றியிலும் தோல்வி; தோல்வியிலும் வெற்றி — விளக்குக.**

! அதான் இருதரப்பினராலுமே தமிழகத்தில் வெற்றி விழாக் கொண்டாடிப் பட்டாசு வெடிக்க முடியாமல் போய் விட்டதே. இன்னும் என்ன விளக்கம் வேண்டிக் கிடக்கிறது!

*** எஸ். செந்தில்குமார், பேரளம்.**

**? பிட் அடித்தும் பாஸ் பண்ண முடியாத மாணவனை என்ன செய்வது?**

! 'நன்றாகப் படித்துப் பாஸ் பண்ணுகிற வழியைப் பார்; குறுக்கு வழிகளை நாடாதே' என்று புத்தி சொல்லித் திருத்த வேண்டியதுதான்!

*** லட்சுமி ராகவன், பெல்லாரி.**

**? அம்புஜம் கிருஷ்ணா பற்றிச் சில வார்த்தைகள்?**

! எம். எஸ். அவர்கள் குரலில் 'கண்ணனிடம் எடுத்துச் சொல்லடி' என்ற பாடலை ஒரு முறை கேட்டவர்கள் அந்தப் பாடலையும் சரி, அதை இயற்றிய அம்புஜம் கிருஷ்ணாவையும் சரி, ஆயுசுக்கும் மறக்க மாட்டார்கள்! நூற்றுக்கணக்கான தமிழ்ப் பாடல்களால் ராமனையும், கண்ணனையும் போற்றிய அம்புஜம் கிருஷ்ணா, இசைத் திறனை மட்டுமின்றி, இலக்கிய நயத்தையும் தமது கீர்த்தனைகளில் காட்டியவர். சமஸ்கிருதம்,



* எதிர்பாரா வெற்றிகள்



* இசையும் இலக்கியமும்

தெலுங்கு, கன்னட மொழிகளிலும் சாகித்யங்கள் உருவாக்கியவர். டி. வி. எஸ் குடும்பத்தில் டி. எஸ். கிருஷ்ணாவுக்கு வாழ்க்கைப் பட்டிருந்த போதிலும், எளிமையான வாழ்க்கை நடத்தியவர். அவர் காலமான போது அஞ்சலி செலுத்த, முன் பின் தெரியாத பலர் நேரில் வந்த போதும், கடிதம் எழுதிய போதும்தான், மூன்றாம் பேருக்குத் தெரியாமல் தமது செல்வத்தை எளியோர் ஏற்றம்பெற எவ்வளவு தூரம் பயன் படுத்தியிருக்கிறார் என்பது அம்புஜம் கிருஷ்ணாவின் பிள்ளைகளுக்கே தெரிய வந்தது!

*** கோ. சு. சுரேஷ், கோவை.**

**? புதிய பிரதமர் எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?**

! அவர் எப்படி இருக்க வேண்டும் என்று நாம் நினைக்கிறோமோ, அப்படித்தான் அவர் இருக்கிறார். ஆனால் சுற்றிலும் இருக்கும் குட்டித் தெய்வங்கள்தான் நாம் எதிர்பார்ப்பது போல் ஒத்துழைப்புத் தந்து நடந்து கொள்ளவில்லை. எல்லாத் தெய்வங்களுக்கும் கர்ப்பக்கிருகம் நிறுவ முடியாது; சில கடவுளர் பிராகாரத்திலும் இருக்கத்தான் வேண்டும். அதனால் அவற்றின் புனிதம் குறைந்துவிடாது. ஒட்டு மொத்தமாகக் கோயிலின் சிறப்புக்கு அவையும் துணை செய்கின்றன. இதைப் புரிந்து கொள்ளாமல் குட்டித் தேவதைகள் படுத்துவதுதான் பிடிக்கவில்லை.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
எஸ். செந்தில்குமார்,
4/29, அக்ரஹாரம்,
அகரகொத்தங்குடி,
பேரளம் — 609 405.

# வல்லமை தாராயோ..?

## 8

**கா**ர் நிதானமாக ஓடிக் கொண்டிருந்தது; கேஸட்டில் புல்லாங்குழல் இசை மெலிதாக ஒலித்துக் கொண்டிருந்தது. அரவிந்த் சாலையைப் பார்த்துக் கொண்டே, "என்ன கிருஷ், பதிலையே காணோம்?" என்றான்.

கிருஷ்ணன் முடிந்த சிகரெட்டை வீசுவதற்கு முன்பாக ஒரு கடைசி முயற்சி செய்து விட்டு ஜன்னல் வழியாகச் சுண்டி விட்டு, "நீ எந்தக் கேள்வியும் கேக்கலையே' என்றான்.

"வந்தனாவை எனக்குப் பிடிச்சிருக்குன்னு சொன்னேன்."

"'கா'வில ஆரம்பிக்கிற மூணெழுத்து சமாசாரமாக்கும்?"

"வச்சிக்கலாம். வொய் நாட்?"

"உன்னைப் பார்த்து நான் பரிதாபப் படறதா, இல்லை கவலைப் படறதான்னு எனக்குத் தெரியிலை."

"ஏன் அப்படிச் சொல்றே?"

"உன் அந்தஸ்து என்னன்னு மறந்துடறே அடிக்கடி. உனக்கு எப்படிப் பட்ட குடும்பங்கள்லேர்ந்தெல்லாம் பொண்ணு கொடுக்கத் தயாரா இருக்காங்கங்கிறதை எல்லாம் மறந்துடறே. பணம் பஞ்சத்தோட சேரக் கூடாதுடா மு ட் ட ா ள்! பணத்தோடதான் சேரணும். வேணும்னா, ரொம்ப ஆசைப் பட்டா, பஞ்சத்தை மஞ்சம் வரைக்கும் கொண்டாந்து பார்த்துட்டு டாட்டா காட்டிடணும்."

"கிருஷ்ணா, இப்படி அபத்தமா பேத்தறதா இருந்தா இனிமே எதையுமே சீரியஸா உன்கிட்டே பேசப் போறதில்லை நான்."

"அதைத்தான் நானும் படிச்சுப் படிச்சுச் சொல்றேன். எதையுமை சீரியஸா எடுத்துக்காதே. உணர்வுகளை அக்கு வேறே, ஆணி வேறேயா பிரிச்சி அலசிப் பார்த்தா சுயரூபம் தெரியும். அது கொஞ்சம் அசிங்கமா இருக்கும். ஆனா அதுதான் உண்மை. எப்பவும் உண்மைகள் அழகா இருக்கிறதில்லை. நாம தான் மெனக்கெட்டு வார்த்தைகளால சட்டை தச்சி மாட்டி அழகுபடுத்தறோம்."

பட்டுக்கோட்டை பிரபாகர்

"இந்த உளறலுக்கு என்னடா அர்த்தம்?"

"வந்தனா மேல உனக்கு ஏற்பட்டிருக்கிறதுக்குப் பேரு காதல் இல்லை. அதுக்குப் பேரு ஆசைன்னு அர்த்தம்."

"சரி, ஆசைன்னே வச்சிக்க. என்ன வித்தியாசம்?

"ஏராளம். இந்த ஆசை இருக்கே அது அதிக அளவு உடம்பு சம்பந்தப்பட்டது. நரம்பு சம்பந்தப்பட்டது. அதில நடனமாடற உணர்ச்சி சம்பந்தப்பட்டது. நீ வந்தனாவைச் சந்திக்க விரும்பறே — தனியா, அந்தரங்கமா, உன் படுக்கையில. அதான் உண்மையோ உண்மை."

கிற்ர்ரீச் என்று பிரேக் அடித்துச் சாலையின் ஓரமாகக் காரை நிறுத்தினான் அரவிந்த்.

"கிருஷ், உனக்கு எதிலயும், எப்பவும் வக்ரமான சிந்தனை! நீ இதே மாதிரிதான் தொடர்ந்து பேசப் போறேன்னா, ப்ளீஸ் இறங்கிக்க. என்னோட இப்போதைய நல்ல மனநிலையைக் கெடுத்துக்க நான் விரும்



பலை.''

''ஸாரிம்மா. என் பாலிசியைப் பல பேர் உடனடியா ஏத்துக்கறதில்லை. ரைட். நான் வாயை மூடிக்கிறேன். நீ என்ன சொல்ல ணுமோ, சொல்லு.''

கார் மீண்டும் புறப்பட்டது.

''கிருஷ், நீ நினைக்கிற மாதிரி எல்லாம் இல்லைடா. எனக்கு வசதிக்குப் ப ஞ் ச மில்லை. என் மனசுக்கு ஏத்த மனைவியா வந்தனா இருப்பான்னு உள்ளுணர்வு சொல்லுது. அந்தஸ்து எட்செட்ரா, எட் செட்ரா எல்லாம் நான் எப்பவுமே பார்க் கிறதில்லை. வந்தனாவை நான் அந்தரங்கமா ஒருவித தீவிரத்தோட நேசிக்க ஆரம்பிச் சிருக்கேன்னு தோணுது. நான் அவளைக் கல்யாணம் செய்துக்க விரும்பறேன். எப்படி இதை நடத்தறது? அதுக்கு யோ ச னை சொல்லு — உருப்படியா.''

''இதிலே என்ன சிக்கல் இருக்குன்னே எனக்குப் புரியலையே கண்ணா. உன்னைக் கல்யாணம் பண்ணிக்க அவளுக்குக் கசக் குமா? அவ கற்பனையில் கூட இப்படி ஒரு வாழ்க்கையை நினைச்சுப் பார்த்திருப் பாளா? நேரா அவ வீட்டுக்குப் போகு வேண்டியது. பேச வேண்டியது. தட்ஸ் ஆல். அவ வீட்ல யார், யார் இருக்காங்க, என்ன விவரம்னு நாளைக்கே நான் விசாரிச்சுச் சொல்றேன்.''

''இது அவ்வளவு சுலபமான விஷயமா எனக்குப் படலை.''

''ஏன்?''

''பணத்துக்குப் பிரமிக்கிற டைப் இல்லை வந்தனா. அவ ஒரு சராசரி இல்லை. அதனா லேயேதான் அவளை எனக்குப் பிடிக்குது. ரொம்ப எதிர்பார்ப்போட அவ வீட்டுக்குப் பொண்ணு கேட்டுப் போய், வந்தனா 'எனக்கு இஷ்டமில்லை'ன்னு சொல்லிட்டா அவமானமாப் போயிடும் கிருஷ். நான் விருப்பப் பட்டுட்டேன்ங்கற காரணத்தால இந்தக் கல்யாணம் நடக்கிறதை விட, அவளும் ஈடுபாட்டோட விரும்பி இதுக்குச் சம்மதிக்கணும்.''

''புரியலையே.''

''அதாவது அவளால நான் நேசிக்கப் படணும். ஐ மஸ்ட் வின் ஹர் லவ். நான் என்னை அவளுக்குப் புரியவச்சு அவ அன்பைச் சம்பாதிச்சு, அதுக்கப்புறம் கல் யாணம் செய்துக்கணும் கிருஷ். அப்பத்தான் அந்த இல்லறம் ஓர் ஈடுபாட்டோட ஆரம்ப மாகும்.''

''அதுக்கு என்ன செய்யணுங்கறே?''

''அவளை நான் அடிக்கடி சந்திக்கணும். அதுக்கு ஒரு வாய்ப்பு வேணும். சில சமயம் வாய்ப்புக்கள் தானா அமையும். சில சமயம் அதை நாமாதான் ஏற்படுத்தணும்.''

''அப்போ சார் ஏதோ பெரிய ஐடியா பண்ணிட்ட மாதிரி தெரியுது. என்ன அது?''

அரவிந்த் தன் யோசனையை விரிவாகத் தெரிவித்ததும், ''விடு, என் கிட்டே சொல் விட்டியில்லே? டன்!'' என்றான் கிருஷ்ணன்.

**பா**னுமதி தன் குழந்தை திவ்யாவை உட்கார வைத்து அதற்குத் தலை சீவி, பவுடர் அடித்துக் கொண்டிருந்த மாலை நேரத்தில் சூர்யா நடந்து கொண்டே படித்தான். கோபி லுங்கி கட்டிக் கொண்டு சமையல் கட்டில் அமர்ந்து ஸ்டவ்வுக்குத் திரிகள் மாற்றிய படி, ''இன்னும் வந்தனா வரலை?'' என்றான் அம்மாவிடம்.

''வந்துட்டா. வந்து காப்பி சாப்பிட்டுட்டு என்னமோ கேஸட் ரெக்கார்ட் செய்யக் கொடுத்தாளாம், வாங்கிட்டு வர்றேன்னு போனா. நாலு ப்ரோக்கர்ஸ் கிட்டே சொல்லி வைடான்னு சொன்னனே, கேக்க மாட்டேங்கறியே கோபி?'' என்றாள் அம்மா.

''விடுதானேம்மா. நான் சொன்னேனா, இல்லையான்னு உங்களுக்குத் தெரியுமா? அம்மா, தனி வீடுங்கிறப்போ ஆயிரம் ரூபாய்க்குக் குறையாம வாடகை சொல் றாங்க. இந்த வீட்ல சில . அசௌகரியங்கள்



இருந்தாலும், வாடகை கம்மி, சென்ட்டரான இடம்.''

"ஆறு குடித்தனம் உள்ள வீட்ல யாரு வர்றா, யாரு போறான்னு தெரியலை. அலாரம் டைம்பீஸ், அயர்ன் பாக்ஸ்ன்னு ஒண்ணு, ஒண்ணாத் திருட்டுப் போகுது. வந்தனாவோட, உன் பொண்டாட்டியோட நாலு சேலைங்க துவைச்சிக் காயப் போட்டதையே உருவிக்கிட்டுப் போயிட்டாங்க. எல்லார் வீட்லயும் வெட்டியா வீட்ல உட்கார்ந்துக்கிட்டுத் தடிப் பசங்க இருக்கானுங்க. உனக்கு ரெண்டு தங்கச்சிங்க இருக்காங்க. கொஞ்சம் பார்க்க லட்சணமா வேற இருக்காங்க எனக்குத்தான் பகீர், பகீர்ன்னு இருக்குப்பா. இதெல்லாம் புரிஞ்சுக்காம வாடகை கூடன்னு சொல்லிட்டே.''

"ஏம்மா அதையும்தானே யோசிக்க வேண்டியிருக்கு. ஏராளமா வச்சிட்டுப் போயிருக்காரா எங்கப்பா? நானும், வந்தனாவும் கொண்டு வர்ற சம்பளத்துல எவ்வளவு செலவுகளைச் சந்திக்க வேண்டியிருக்கு. சூர்யாவோட காலேஜ் செலவு எவ்வளவாகுதுன்னு தெரியாதா உங்களுக்கு?''

"வந்தனாவுக்கு நல்ல சம்பளத்திலே ஒரு வேலை கிடைச்சுட்டா பரவாயில்லை.''

"அவளும் பல கம்பெனிகளுக்கு அப்ளை பண்ணிக்கிட்டுத்தான் இருக்கா. நானும் தெரிஞ்சவங்ககிட்டே எல்லாம் சொல்லிக்கிட்டிருக்கேன். தற்காலிகமா இந்த பார்ட் டைம் வேலையாவது கிடைச்சதேன்னு திருப்திப்பட்டுக்க.''

"அண்ணா, யாரோ வந்திருக்காங்க'' என்று குரல் கொடுத்தாள் சூர்யா.

கோபி கைகளைத் துடைத்துக் கொண்டு சமையலறையிலிருந்து வந்து பார்க்க, "வணக்கங்க. என் பேர் கிருஷ்ணன். மிஸ். வந்தனாவைப் பார்க்க வந்தேன். நீங்க அவங்க பிரதரா?'' என்றான்.

பானுமதி குழந்தையைத் தூக்கிக் கொண்டு உள்ளறைக்குச் செல்ல, சூர்யா நாற்காலி கொண்டு வந்து போட்டாள்.

"ஆமாம். உக்காருங்க. இப்ப வந்துடுவா. என்ன விஷயமாப் பார்க்கணும்?''

"தயாள் அண்ட் கம்பெனியோட ஓனர் அரவிந்த் என் ஃப்ரெண்ட். உங்க சிஸ்டர் அவனை ரேடியோவிலே பேட்டி எல்லாம் கண்டாங்க.''

"தெரியும். விளம்பரத்துக்குக் கூடக் குரல்

## இளையராஜாவின் அணுகுமுறை!

இளையராஜாவும், கங்கை அமரனும், வித்துவான் டி.வி. கோபாலகிருஷ்ணனிடம் கர்நாடக இசை பயின்றார்கள்.

டி.வி.ஜி. சொல்கிறார்:

"இளையராஜா சங்கீதம் மட்டுமல்ல; சம்ஸ்கிருதமும் கற்றுக் கொண்டார். ஏன், பாஷைகள் பலவும் கற்றுக் கொண்டார். ஆழ்ந்த ஞானம். கடுமையான உழைப்பாளி. காலை நாலரை மணிக்கே பாட வந்துவிடுவார்.

சினிமா சங்கீதத்தைப் பொறுத்த அளவில் அவருடைய அணுகு முறையே அலாதியானது.

கமலின் 'குரு' படத்தில் மிருதங்கத்தை உபயோகிக்கச் சொன்னார். ஹீரோ திரையில் வருகிற போதெல்லாம் பின்னணியில் மிருதங்க ஒலியை மட்டுமே சந்தர்ப்பத்துக்குத் தகுந்த மாதிரி வெவ்வேறு விதமாய் உபயோகித்தேன்.

ப்ளட் ஸ்டோன் படத்துக்கு இசை அமைத்தாரே? அதில் சண்டைக் காட்சிகளுக்கு என்னை இந்துஸ்தானி ராகத்தை ஆலாபனை செய்யச் சொல்லி அதையே பின்னணியாக உபயோகித்தார்!

ராஜா கர்நாடக இசையை மெய்மறந்து ரசிப்பார். வெரி சென்ஸிடிவ். ஒரு நல்ல சங்கதி போட்டால் அவர் உடம்பு அதிரும். ராஜாவிடம் நான் சொல்லுவதுண்டு. படத்தில் நான்கு, ஐந்து பாடல்கள் இருந்தால் ஒன்றே ஒன்றை தனி கர்நாடக இசையில் அமையுங்கள் என்று.

கேரளத்தில் வி. தட்சிணாமூர்த்தி என்ற இசையமைப்பாளர் கிட்டத்தட்ட எல்லாப் பாடல்களையுமே கர்நாடக இசையை அடிப்படையாக வைத்துத்தான் அமைத்து வருகிறார். அத்தனையும் ஹிட். அவை சாதாரண மக்களையும் திரும்பப் பாடச் செய்கின்றன. கர்நாடக இசை என்று அறியாமலே மக்கள் ரசிக்கிறார்கள். 'கானம்' மலையாளப் படத்தில் ஜேகதாகம், பாலமுரளியும் பாடியது அத்தனையும் கர்நாடக ராகங்களே! கர்நாடக இசை ரொம்பக் குழப்பமானது, கடினமானது என்றெல்லாம் நினைப்பவர்களைக் கூட 'இவ்வளவு சுலபமானதா கர்நாடக இசை!' என்று கேட்க வைக்கிற அளவுக்குச் சுலபமாக்கித் திரை இசையில் வழங்க முடியும்.

— நாதன்



• டி.வி.ஜி.

கொடுத்ததாச் சொன்னா.''

''ஆமாம். அவன்தான் என்னை அனுப்பி வைச்சான். ஒண்ணுமில்லை. உங்க சிஸ்டர் பார்ட் டைம் வேலை பார்க்கிறதாகவும், ஃபுல் டைம் வேலை நல்லதாத் தேடிக்கிட்டிருக்கிறதாகவும் சொன்னாங்களாம். கம்பெனியிலே ஒரு கிளார்க் போஸ்ட் காலியாயிருக்கு. என்னைக் கூப்பிட்டனுப்பிச்சான். 'அந்தப் பொண்ணு வந்தனாவை ரெண்டு மூணு தடவை சந்திச்சுப் பேசினதில திறமையான பொண்ணா, நல்ல பொண்ணாத் தெரியுது. நீ போய்ச் சொல்லு. விருப்பமிருந்தா இந்த வேலையைக் கொடுக்கலாம்'னு சொன்னான். ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம். இதைச் சொல்லத்தான் வந்தேன்,'' என்ற கிருஷ்ணன், ''என்ன வாடகை இந்த போர்ஷனுக்கு?'' என்றான்.

''முந்நூற்றைம்பது ரூபாய்.''

''அநியாய வாடகையா இருக்கே. நீங்க என்ன சார் பண்றீங்க?''

கோபி தான் வேலை பார்ப்பது பற்றி, தன் நிறுவனம் பற்றி, குடும்பம் பற்றிச் சற்று விரிவாகப் பேச ஆரம்பித்தான்.

கிருஷ்ணன் தன் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு, ''நான் ஒருத்தரை மீட் பண்ண வேண்டியிருக்கு. உங்க சிஸ்டர் கிட்டே சொல்ல வந்ததெல்லாம் உங்க கிட்டே சொல்லிட்டேன். நீங்க சொல்லிடுங்களேன். நாளைக்குக் காலைல அவங்களை யெஸ் ஆர் நோன்னு பதிலை போன் பண்ணிச் சொல்லச் சொல்றீங்களா? ஏன்னா ஏகப்பட்ட சிபாரிசு! வேற யாருக்காச்சும் ப்ராமிஸ் பண்ணியாகணும் அவன். அப்போ நான் புறப்படறேன்.''

''வந்தனா ஒரு பெட்டர் ஜாப் தேடிட்டுத்தான் இருக்கா. அதனால இதில மறுப்பு சொல்றதுக்கு எதுவுமே இல்லை. நான் அவ கிட்டே பேசறேன். போன் என்ன செய்யறது. நானே அவளை அழைச்சுக்கிட்டு நேரிலே வர்றேன். இவ்வளவு நினைவா அக்கறையோட சொல்லி அனுப்பினவரை நேர்ல பார்த்து நன்றி சொல்றதில்லையா?'' என்றான் கோபி.

*

கிருஷ்ணன் புறப்பட்டுச் சென்ற கொஞ்ச நேரத்தில் வந்த வந்தனாவின் வாயில் சர்க்கரை போட்டுவிட்டுப் பிறகு ஆரம்பித்துச் செய்தியைச் சொன்னான் கோபி. வந்தனா உற்சாகமடையவே செய்தாள்.

''கொஞ்சம் விரிவா சிந்திக்கிறவர் அண்ணா அவர். அதனால நான் ரேடியோ நிகழ்ச்சிகள்ல தொடர்ந்து கலந்துக்கிறதுக்கு மறுப்பு எதுவும் சொல்ல மாட்டார்னு நினைக்கிறேன். விலகறதாச் சொன்னா, பாவம், குப்தா கொஞ்சம் வருத்தப்படத்தான் செய்வார். நான் இப்பவே போய்க் குப்தாகிட்டே பேசிட்டு வர்றேன்.''

குப்தா அவள் எதிர்பார்த்ததற்கு மாறாக் சந்தோஷமே பட்டான். ''வந்தனா, நீ திறமைக்கு இக்கட வேலை பார்க்கிறது சரியில்லைதான். நீகு நல்ல வேலை கிடைச்சது சந்தோஷம்தான். உனக்கு என்ன பிரச்னைன்னாலும் உரிமையோட எப்ப வேணும்னாலும் நன்னு அடகொச்சுனு.'' என்றான்.

மறுநாள் காலை ஏழு மணிக்கெல்லாம் அரவிந்த் வீட்டின் வரவேற்பறையில் கோபியும், வந்தனாவும் காத்திருந்தார்கள். அங்கே மாட்டப்பட்டிருந்த ஓவியங்களில் தெரிந்த அரவிந்தின் ரசனையை வியந்தாள் வந்தனா. இந்த மாதிரி பெயிண்ட்டிங்ஸ் எல்லாம் விரும்புகிறவனா இவன், அல்லது ஒரு ஷோவுக்காக மாட்டி வைத்திருக்கிறானா?

சற்று நேரத்தில் வந்த அரவிந்த், ''குட் மார்னிங் மிஸ். வந்தனா. குளிச்சிட்டிருந்தேன். காக்க வைச்சிட்டேனா?'' என்று அலுவலக அறை சென்று அமர்ந்தான்.

பின் சென்ற வந்தனா, ''சார், இவர் என் அண்ணன் கோபி'' என்று அறிமுகப்படுத்தினாள். இருவரும் கைகுலுக்கிக் கொண்டார்கள்.

''சார், நேத்து உங்க ஃப்ரெண்டு வந்து சொன்னது ஒரு எதிர்பாராத இன்ப அதிர்ச்சி. எனக்கு அந்த சான்ஸ் கொடுக்க நினைச்சதுக்கு ரொம்ப தேங்க்ஸ்'' என்றாள் வந்தனா.

கோபியும் தன் நன்றியைத் தெரிவித்தான்.

''என் மனசில பட்டது. நீங்க பார்ட் டைமா எங்கோ வேலை பார்க்கிறதாச் சொன்னதால, உதவியா இருக்குமேன்னு நினைச்சேன். எப்போ ஜாய்ன் பண்றீங்க மேடம்?'' என்று அடக்கமாகக் கேட்ட அவனை மிகவும் பிடித்துப் போனது கோபிக்கு.

(தொடரும்)



அடுத்த இதழில்...

## ரீதேவிலால்: துணையா தலைவலியா..?

— சிறப்புக் கட்டுரை



# ஸ்ரீராம் குரூப் நிறுவனங்கள் நடத்தும்

# மகாகவி பாரதியார் 108வது பிறந்த நாள் விழா.

## டிசம்பர் 16, (சனிக்கிழமை)

## ஏவி.எம். இராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் காலை 10 மணிக்குத் தொடங்குகிறது.

மகாகவி சுப்ரமணிய பாரதியாரின் 108ஆவது பிறந்தநாள் விழா 16-12-89 சனிக்கிழமை காலை 10 மணிக்குத் தொடங்கி, சென்னை இராஜேஸ்வரி திருமணக் கூடத்தில் நடைபெறுகிறது.

விழாவிற்கு, தஞ்சை பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் தலைமை வகிக்கிறார்கள்.

நவபாரத சிற்பி நேரு-
உன்னத நிகழ்ச்சிகள்
தொகுப்பு: ஆர். சீனிவாச மூர்த்தி
பாரதி கண்ட பாரதம்
எழுதியவர்: லலிதா பாரதி
இரு நூல்களும் காலை விழாவிற்கு
வருகை தருபவர்களுக்கு
அன்பளிப்பாக வழங்கப்படும்.

### விழா நிகழ்ச்சிகள்:

- புரட்சிக் கவி பாரதிதாசன் திருஉருவப்படத் திறப்பு.
- பாடல் போட்டி, பேச்சுப் போட்டிகளில் பரிசு பெற்றவர்களுக்குப் பரிசளிப்பு.
- பாரதி புகழ் பரப்பிய அறிஞர்களுக்குப் பொற்கிழி அளித்தல்.
- பாரதி தமிழ்ப்பணி இயக்கம் தொடக்கம்.
- பாரதியார் பாடல்கள் இசை நிகழ்ச்சி.
- 1988ஆம் ஆண்டுச் சிறந்த நாவல்களுக்குப் பரிசு.
- பட்டிமன்றம்.

அனைவரும் வருக வருக என அன்புடன் அழைக்கிறோம்.




**ஸ்ரீராம் குரூப் கம்பெனிகள்**

ஸ்ரீராம் ஹவுஸ், 10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை-600 086.

# குன்னக்குடியின் வாசிப்பு—

# வித்வத்தா, வித்தையா?



**விவாதிப்பவர்கள்:**

**அனிதா ராமச்சந்திரன் — ஆனந்த் சிவா**

• ஆனந்த் சிவா

• அனிதா



ஆனந்த்சிவா: குன்னக்குடி ஒரு மேதை என்பதில் சந்தேகமில்லை. அவரது விரல்கள் வயலினில் விளையாடுவது பிரமிக்கத்தான் வைக்கிறது. ஆனால் அவர் வாசிப்பில் கீர்த்தனைகள் ராக பாவத்தோடு வெளிப்படுகின்றனவா...? எல்லாமே உச்ச ஸ்தாயியில் போய்தான் நிற்கிறது. எல்லா ராகத்தையும் வேகமாக, உச்ச ஸ்தாயியில் வாசித்தால் பாவம் என்னாவது? நல்ல சங்கீதம் கேட்க வந்தவன் முணுமுணுத்தபடிதான் வெளியே போவான்.

அனிதா: குன்னக்குடி தமக்கென்று ஒரு பாணியை உருவாக்கிக் கொண்டுள்ளார்; அந்தப் பாணியை ரஸிகர்களும் வரவேற்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம். இன்றைக்குப் பிரபலமாக இருக்கும் மற்ற வயலின் வித்வான்களின் கச்சேரிக்கு வரும் கூட்டத்தை விட, குன்னக்குடிக்கு வரும் கூட்டம் அதிகம்.

ஆனந்த்: பல நூறு வருடங்களாகக் கர்நாடக இசை இருந்து வருகிறது. எந்தெந்த ராகத்தை எப்படி எப்படி வாசிக்க வேண்டும் என்று முறைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். தமது திறமையைக் காட்ட வேண்டுமென்பதற்காக வயலினுடன் வேகமாக விளையாடும் போது தமது வித்வத்தையே கேள்விக்குறியாக்குகிறாரே குன்னக்குடி?

அனிதா: கச்சேரிக்கு வருபவர்கள், இசையைக் கேட்டால் சந்தோஷம் பெருகும் என்ற எண்ணத்தில்தான் வருகிறார்கள். கடைசி வரிசையில் அமர்ந்திருப்பவர்களும் குன்னக்குடியின் கச்சேரியைக் கேட்டுவிட்டு மகிழ்ச்சியோடுதான் போவார்கள். முதல் சில வரிசைகளில் ஏதோ சாஸ்திரீய சங்கீதத்தைக் கரைத்துக் குடித்தது போல் பாவனை செய்யும் சிலர், குன்னக்குடியைப் பற்றி முணுமுணுக்கலாம். கவலை இல்லை. கர்நாடக இசையை மக்களிடம் கொண்டு செல்கிறார் குன்னக்குடி. அவர் ஜீனியஸ் என்று நீங்களே ஒப்புக் கொண்டீர்கள். அப்படியிருக்க முறையற்ற சங்கீதம் அவர் வயலினிலிருந்து வருமா?

ஆனந்த்: இசையை மக்களிடம் கொண்டு போகும் போது முழு வடிவத்தோடு, தன்மை மாறாமல் கொண்டு போக வேண்டும். அரைகுறையாகக் கொண்டு போனால், 'அட, இதுதானா கர்நாடக சங்கீதம்?' என்று விஷயம் தெரியாதவர்கள் எண்ணிக் கொண்டு போவார்கள்.

அனிதா: வெகுஜனங்களைக் கவர்கிற அதீத வேகம், அதிக சப்தம், விறுவிறுப்பு, அவர் வாசிக்கும் போது வெளிப்படுத்தும் முகபாவங்கள் — இவையே குன்னக்குடியின் ப்ளஸ் பாயிண்ட்டுகள் என்று சொல்லுவேன் நான்.



## சிங்கப்பூருக்கு வந்த செய்தி!

"தமிழிசைக்காகவே தன்னை அர்ப்பணம் செய்து கொண்ட நிறுவனம், 'எனக்கு இசைப் பேரறிஞர் விருது அளிக்க விரும்புவதாகச் சிங்கப் பூரில் நான் இருந்தபோது செய்தி வந்தது. மகிழ்ச்சியோடு நான் ஒப்புதலைத் தெரிவித்தேன். ஒரு காலத்தில் நான் பல சபைகளில் தனிக் கச்சேரிக்கு வாய்ப்புக் கேட்டு மறுக்கப்பட்டேன். அப்போது (1973) ராஜா சர் முத்தையா செட்டியார்தான் தமிழிசைச் சங்கத்தில் எனக்கு 'ஸோலோ' வாய்ப்புக் கொடுத்தார். அவரைத்தான் இப்போது நினைத்துக் கொள்கிறேன்'' என்று கூறும் குன்னக் குடிக்கு, ரசிகர் மன்றம் இருக்கிறது. மதுரையில் தலைமைச் செயலகம் – இருபத்தி நாலு கிளைகள்; பத்தாயிரத்துக்கு மேற்பட்ட உறுப்பினர்கள்!

— நிருபர்.

ஆனந்த்: எல்லாப் பாட்டையும் வேகமாக வாசித்தால் பொருத்தமாய் இல்லையே... அதற்கு ஒரு முறையிருக்கிறது. மேலும் கர்நாடக இசையின் வனப்பு வேகத்தில் இல்லை, பாவத்தில்தான் இருக்கிறது.

அனிதா: ஆனால் குன்னக்குடியின் வாசிப்பில் 'ரிதம்' இருக்கிறதே...

ஆனந்த்: அவர் கச்சேரியில் அந்த ரிதமும் தாள வாத்தியக்காரர்கள் எழுப்பும் ஓசையில் அமுங்கிப் போகிறது. போதாக் குறைக்குத் தவுல் வேறு! பக்கவாத்தியக் காரர்கள் எழுப்பும் ஓசையை விட, தமது வயலின் அதிக ஓசையோடு ஒலிக்க வேண்டும் என்ற முயற்சியில் கொஞ்சநஞ்ச மென்மையும் அடிபட்டுப் போய் விடுகிறது.

அனிதா: குன்னக்குடியின் கச்சேரியில் பக்கவாத்தியங்கள் முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. அதிலென்ன தவறு? எந்தக் கட்டத்திலும் பிரதானமான வயலினை அவை மீறுவதில்லை என்பது என் அபிப்பிராயம். ரசிகனும் தாளம் போட்டுக் கொண்டு நன்றாக ரசிக்கிறான். தமது கச்சேரியில் ரசிகர்களை முழுமனத்தோடு ஈடுபடச் செய்வது அவரது வெற்றியல்லவா? பக்கவாத்தியக்காரர்கள் ரசிகர்களைக் கவர்ந்தாலும் சரி, குன்னக்குடி தமது திறமையால், கவர்ந்தாலும் சரி, மொத்தத்தில் ரசிகன் முழுப்பலனை அடைந்து விடுகிறானே!

ஆனந்த்: நல்ல கர்நாடக சங்கீதத்தைக் கற்றுக் கொண்டு வரும் ஒரு மாணவன், குன்னக்குடியின் கச்சேரிக்குச் சென்றால், ஏதாவது புதிதாகக் கற்றுக் கொண்டு வர முடியுமா? சரி, அதுதான் போகட்டும். எவ்வளவோ பெரிய வித்வான்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சிஷ்யர்கள் உண்டு. தம்மைப் போலவே வாசிக்கும் ஒரு சிஷ்யனைக் குன்னக்குடியால் உருவாக்க முடியவில்லையே!

அனிதா: அவர் வாசிப்பு ஒரு தனி 'ஸ்டைல்.' அதைப்போல் வேறு யாரும் வாசிக்க முடியவில்லை என்பதே அவர் பெரிய மேதை என்பதை உணர்த்தும் — இசைக்குப் புது வடிவம் கொடுத்திருக்கிறார் அவர். எல்லாவற்றிலும் மாறுதல் வருவது போல கர்நாடக இசையிலும் சில மாறுதல்களைக் கொண்டு வந்திருக்கிறார். ஆனால் அடிப்படையான விதிமுறைகளை விட்டுக் கொடுத்து மாறுதல் செய்யவில்லை!

ஆனந்த்: மன்னிக்கணும். என்னால் இதை ஏற்க முடியவில்லை. "க்ஷீர சாகர"வைத் தியாகராஜர் எந்த உணர்ச்சியுடன் பாடினாரோ அதை மறந்துவிட்டு, ரசிகர்களின் கரகோஷத்துக்காக வாசிக்கும் போது அது நீர்த்துப் போய் விடுகிறது. அவர் குறைந்தபட்சம் இந்த வித்தைகளையெல்லாம் மெயின் கச்சேரியில் காண்பிக்காமல் துக்கடாவோடு நிறுத்திக் கொள்ளலாம்.

அனிதா: வெகுஜனங்களைக் கட்டுப் படுத்தி ரசிக்கச் செய்ததன் மூலம் கர்நாடக சங்கீதத்தை அழியாமல் காப்பாற்றியவர்களில் ஒருவர் குன்னக்குடி என்று எதிர்காலம் அவரை நிச்சயமாகப் போற்றத்தான் போகிறது!

தொகுப்பு: ப்ரியன்.

படங்கள்: ராஜன்.

வண்ணப்படம்: யோகா.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: இ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka